

# நம்மால் முடியும் தம்பி நம்பு!

டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி

வானதி பதிப்பகம்

# நம்மால் முடியும் தம்பி-நம்பு!

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி.நகர், சென்னை-17.

# நன்றி உரை

துணிச்சலுக்கும், தெளிவிற்கும்,
நாட்டைப் பற்றிய ஒரு பரந்த
கண்ணோட்டத்திற்கும் பெயர் போனவர்
ஆனந்தவிகடன் ஆசிரியர் பாலன்.

நான் எழுதியவற்றை எல்லாம்
பிரசுரித்தால் பத்திரிக்கைக்கு அரசாங்கத்தால்
பாதகம் வருமோ என்று நான்
கேட்டபோதெல்லாம், தயங்காது
"உங்கள் ஆக்க சக்திகளைக் கட்டுப்படுத்த
வேண்டாம்.
எதைச் சொல்ல வேண்டுமென்று
விரும்புகிறீர்களோ
அதைச் சொல்லுங்கள். மற்றதை நான்
பார்த்துக் கொள்கிறேன்!" என்றவர்
பத்திரிகாசிரியர் பாலன்.

'நம்மால் முடியும் தம்பி-நம்பு' கட்டுரைத்தொடர்
வாசகர்களுக்கிடையே ஒரு மகத்தான—
அசாதாரணமான வரவேற்பைப் பெற்றது.

என் எண்ணங்களுக்கு மேடை
அமைத்துத் தந்த ஆசிரியர் பாலன்
அவர்களுக்கு
என் நெஞ்சார்ந்த நன்றி.

எம். எஸ். உதயமூர்த்தி
ஆகஸ்ட் 15, 1988.

# நம்பிக்கை ஒளி

சிறந்த சிந்தனையாளரான டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி அவர்கள் ஆனந்த விகடனில் எழுதிய 'நம்மால் முடியும் தம்பி—நம்பு' என்ற தொடர் கட்டுரைகள் இப்பொழுது புத்தக வடிவில் வருகிறது. அவருடைய கட்டுரைகளில் நம்நாட்டு அரசியல்வாதிகள் நாட்டை முன்னோக்கிச் செலுத்தத் திட்டமிடாமல் பழம் பெருமை பேசிப் பொழுதைக் கழிக்கிறார்கள் என்ற கருத்து வலியுறுத்தப்படுகிறது.

ஜப்பான் போன்ற வளர்ச்சி பெற்ற நாடுகளில் மக்கள் திட்டமிட்டு 21-ம் நூற்றாண்டை நோக்கி முன்னேற்றப் பாதையில் நடைபோடுகிறார்கள் என்பதையும், நம் நாட்டிலோ திட்டமிட்டு உழைத்து மக்கள் முன்னேற வில்லை, நாட்டையும் முன்னேற்றவில்லை என்பதையும் டாக்டர் உதயமூர்த்தி தெளிவாக எடுத்துரைக்கிறார். நம் நாட்டு மக்கள் பேச்சில் இன்பங் காண்கிறார்களே தவிர செயலாக்கத்தில் இறங்குவதில்லை என்பதைச் சுட்டிக் காண்பிக்கிறார். எந்த நேரமும் மக்கள் செயல், செயல் என்று துடிப்போடு செயல்படவேண்டும்; கடுமையாக உழைக்கவேண்டும்; சுறுசுறுப்பாக இயங்கவேண்டும்; அப்பொழுதுதான் மக்கள் முன்னேறி நாட்டையும் முன்னேற்றமுடியும் என்பதை அழுத்தம் திருத்தமாகக் கூறுகிறார்.

இந்நூலினைப் படித்தால் நம் நாட்டு இளைஞர்கள் அரசியல் விழிப்புணர்ச்சி பெற்று வருங்கால இந்தியாவை எப்படியெல்லாம் உருவாக்கலாம், முன்னேற்றலாம் என்ற தெளிவு பெறுவார்கள். இந்நூலின் மூலம் நல்ல சிந்தனை களை நாட்டு மக்களுக்கு உரமாகத் தந்துள்ளார் டாக்டர்

எம்.எஸ்.உதயமூர்த்தி அவர்கள். இந்நூலினை அனைவரும் படிக்கவேண்டும். குறிப்பாக இளைஞர்கள் அவசியம் படிக்கவேண்டும்.

விஞ்ஞானத் துறையிலும், விவசாயத் துறையிலும், தொழில் துறையிலும், அறிவியல் துறையிலும் இளைஞர்கள் மேற்கொள்ளவேண்டிய சிந்தனை, செயல்திறன்களை இந் நூலின் மூலம் வலியுறுத்திச் சொல்கிறார்.

எண்ணங்கள் நல்லனவாக இருந்தால், மக்கள் நம்பிக்கையோடு செயல்பட்டால், விடாமுயற்சியுடன் உழைத்தால், தனி மனிதனும் உயரலாம்; நாடும் உயர்வு பெறும் என்பதை பல மேற்கோள்களுடன் இந்நூலில் கூறுகிறார். நாட்டு மக்களுக்கு நம்பிக்கை ஒளியைக் காட்டும் ஆசிரியரைப் போற்றுவீர்கள் என்று நம்புகிறேன்.

ஏ. திருநாவுக்கரசு

வானதி பதிப்பகம்

## காணிக்கை

தியாக உணர்வும்
தயாள உள்ளமும்
கொண்ட எனதருமை
பேராசிரியர்—என்
வாழ்விற்கு வழிகாட்டிய
அறிஞர் பெருமகன்

**டாக்டர். பி. எஸ். தியாகராஜன்**
அவர்களுக்கு

எனது குடும்பத்தின்
அன்புக் காணிக்கையாக
இந்நூலை சமர்ப்பிக்கிறேன்.

ஆகஸ்ட் *15-1988*
சென்னை

**எம். எஸ். உதயமூர்த்தி**

## பொருளடக்கம்




## நம்மால் முடியும் தம்பி—நம்பு!

ஏதோ ஒரு மகத்தான மாற்றம்—நல்ல மாற்றம்— இந்த நாட்டுக்கு உடனடியாகத் தேவைப்படுகிறது என்று என் உள்மனம் சொல்லிக்கொண்டிருந்தது.

நான் கிராமத்தை நோக்கிப் பயணத்தைத் துவக்கினேன்.

சென்னை பாரிமுனை பஸ் நிலையத்தில் எப்போதும் போல் ஏகக் கூட்டம்.

"ஏனப்பா...? அண்ணா போக்குவரத்துக் கழகம் இருக்கு, தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகம் இருக்கு... பெரியப்பா பேரிலே ஏன் போக்குவரத்துக்

கழகம் வெக்கலே...?" என்று ஐந்து வயதுச் சிறுவன் ஒருவன் யதார்த்தமாகக் கேள்வி கேட்டுக்கொண் டிருந்தான். அண்ணா மாவட்டம் என்றும், பெரியார் மாவட்டம் என்றும், அண்ணா சிலை, தந்தை சிலை என்றும், அன்னை சத்யா போக்குவரத்துக் கழகம் என்றெல்லாம் இருக்கும்போது, 'பாவம் பெரியப்பா, பாவம் அத்தை, பாவம் பாட்டி!' என்று அந்த இள உள்ளம் எண்ணி இருக்கவேண்டும்.

மற்றொரு சம்பாஷணையில் என் காது ஈடுபட்டது. "கருணாநிதி மாளிகைன்னு போட்டிருந்த பேரை, இவர் வந்தவுடன் எடுத்திட்டாரு தெரியுமில்லே!" என்று ஒருவர் தொடர்ந்துகொண்டிருந்தார்.

"அவர் வந்தார்னு மேல்சபையையே எடுத்துட்டா ரில்லே, அதைவிடவா இது பெரிசு..." என்று பழங் கதையை நினைவுபடுத்தினார் மற்றவர்.

"முடிச்சுப்பிடலாங்க... மினிஸ்டரைப் பார்த்துக் குடுத்திட்டேன். அவர் 'அப்படியே உள்ளூர் கலெக்டர், தாசில்தார், ஆர்.டி.ஓ.,பி.டி.ஓ.எல்லாரையும் கவனிச்சுக் குங்க'னு சொல்லிட்டாரு. அவ்வளவுதான். ஒரு பயல் நம்மை அசைச்சுக்க முடியாது!" என்று ஒருவர் தன் சகாவிடம் விளக்கிக் கொண்டிருந்தார்.

"அண்ணே! நம்ம வஸ்தாது பக்கிரியைப் பெருமாள் கோயில் தக்காராய்ப் போட்டிருக்கானுவல்லே. இந்தப் பய, பெருமாள் கோயில் நகையை அடமானம் வெச்சுப் பணம் வாங்கிட்டான்."

கொஞ்சம் நகர்ந்தேன். இளைஞர் கூட்டம் ஒன்று பேசிக்கொண்டிருந்தது.

"இன்ஜினீயரிங் படிச்சிட்டு ரெண்டு வருஷமா அலையறேன். ஈஸ்ட் கோஸ்ட்லே உனக்கு யாரையாவது தெரியுமா...?"

"ஏம்பா, நீ ஒண்ணு பேஜாரு! கிராமத்தைப் பார்த்துப் போ! ரூம் ரெண்ட் ஆவது மிச்சமாகும்!"

"கிராமத்திலே கிணத்திலேகூடத் தண்ணி இல்லே!"

"உனக்கிருக்கிற பர்சனாலிடிக்குப் பேசாம சினிமா விலே சேர்ந்துடப்பா!"

"ஆமாம்! ஸ்ரீதேவி நம்பளைத்தான் தேடிக்கிட் டிருக்குன்னு சொன்னாங்க. நாளைக்கே போயிடறேன்!"

வெற்றிலை போட்டவண்ணம் இரண்டு பெரியவர் கள் ஒதுக்குப்புறமாக நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். "லோகத்திலே அதர்மம் மிஞ்சிப் போச்சு. நம்ம வீட்டு தென்னை மரத்திலே இருந்த தேங்காயைப் பறிச்சிண்டு போயிட்டான். வாழைக்காயை வெட்டிண்டு போயிட் டான். ஊர்லே காலிப் பயல்கள் அதிகமாயிட்டா... கொடி பிடிச்சுண்டு போறா...ராஜா முறைகெட்டு நடந்தா, லோகத்திலே மழை பெய்யாதுனு சொல்லுவா. அதான் நடக்குது. மழையைக் காணோம். இந்த மாதிரி என் ஜென்மத்திலே பார்க்கலே...ஆண்டவா!"

நாட்டின் பெரிய பெரிய அவலங்களெல்லாம் என் மனத்தில் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. 'தம்பீ! இந்த அவலமெல்லாம் நாளை உன் சொத்து. இதற்கெல்லாம் நாளை நீதான் வாரிசு!' என்று அவனிடம் சொல்ல வேண்டும் போலிருந்தது.

**நா**ன் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தேன். பஸ் நகரத் துவங்கியது. "நாட்டை மாத்த முடியும்னு நெனைக்

கிறீங்களா...?" என்று கேட்டார் என் அருகிலிருந்த நண்பர். நான் பதில் சொல்லவில்லை. நிகழ்ந்த சம்பாஷணைகளை மனம் அசை போட்டுக்கொண் டிருந்தது.

"கிராமத்துலே எவ்வளவு நாள் தங்கப்போறீங்க...?"

"அங்கதான் சொந்த வீடு இருக்கு..."

"கிராமத்துலே ஒண்ணும் செய்ய முடியாதுங்க. தண்ணி இல்லே; லேபர் பிராப்ளம்; கட்சிக்காரனுவ தொல்லை ஜாஸ்தியாப் போச்சு..."

பஸ் ஓடத் துவங்கியது; பள்ளம், படு குழி ஆட்டம், குலுக்கல் என்ற ஓட்டத்தில், நான் கிராமத்தில் செய்யக் கூடியவற்றைப் பற்றி எண்ணிக்கொண்டிருந்தேன். நான் படித்த சம்பவம் ஒன்று நினைவுக்கு வந்தது.

கான்ராடு ஹில்டன் அமெரிக்காவின் மிகப் பெரிய ஹோட்டல் தொழிலதிபர். ஹாலிவுட்டில் தான் கட்டிய புதிய ஹோட்டல் ஒன்றின் திறப்புவிழாவுக்கு ஏற்பாடு செய்கிறார். அதற்காக எல்லா அரசியல் புள்ளிகளும், பிரபல நட்சத்திரங்களும் வருகிறார்கள். ஹில்டன் தன் தமக்கைக்கு—அவசியம் வந்து விழாவில் கலந்து கொள்ளுமாறு அழைப்பு அனுப்புகிறார்.

ஹில்டனின் மூத்த சகோதரி கிராமத்தில் வசித்துக் கொண்டிருப்பவர்—பதில் எழுதுகிறார்: 'தம்பீ! உன் ஹோட்டல் திறப்புவிழா அழைப்பிதழைப் பார்த்தேன். ரொம்ப நல்ல விஷயம். நீ ஒரு விஷயத்தை மறந்து விட்டாய்! இப்போது இங்கு இது ஊறுகாய் போடும் காலம். வருஷத்துக்கும் இப்போதும் ஊறுகாய் போட வில்லையென்றால், வேறெந்த சீஸனிலும் வெள்ளரிப் பிஞ்சு கிடைக்காதே! நான் எப்படி வரமுடியும்...?'

அப்போதுதான் ஹில்டனுக்கும் புரிந்தது. 'ஹாலி வுட்டில் திறக்கும் ஹோட்டல் மிக முக்கியமானதாய் இருக்கலாம். அதே அளவுக்கு அந்த 'சீஸனில்' போட வேண்டிய ஊறுகாய் வேலையும் அவ்வளவு முக்கியத்து வம் வாய்ந்ததுதான். சந்தேகமில்லை!' என்று தன் சுய சரிதத்தில் எழுதுகிறார் ஹில்டன்.

சமீபத்தில் தமிழ்நாட்டின் ஒரு பிரபல தொழிலதிப ருடன் பேசிக்கொண்டிருந்தேன்.

அவர் தனது வளர்ச்சித் திட்டங்களையெல்லாம் விளக்கிக் கொண்டிருந்தார். 150 கோடியில் ரசாயன சோப்புத் தூள் செய்யும் தொழில் நிறுவப்படுவதைக் கூறினார். 200 கோடியில் ஜப்பானியத் தொழில் நுட்பத் துடன் புதிய கார் உற்பத்தி செய்வதைப் பற்றிச் சொன்னார். மற்றும் பல பெரிய தொழில் திட்டங்களை விளக்கிக்கொண்டிருந்தார். கேட்கக் கேட்க எனக்குப் பெருமையாக இருந்தபோது, "அடுத்த வாரம் எங்கே இருப்பீர்கள்...?" என்று என்னைப் பார்த்துக் கேட்டார்.

"எங்கள் கிராமத்துக் குளத்தில் தூர் எடுக்க வேண்டியிருக்கிறது. அது விஷயமாக நான் கிராமத் துக்குப் போகிறேன்" என்று சொன்னேன். இதைக் கூறியபோது நான் கூசிக் குறுகவில்லை.

என் குரலில் தடுமாற்றம் ஏற்படவில்லை! எனக்கு ஹில்டனின் சகோதரியின் கதைதான் ஞாபகத்துக்கு வந்தது. பல நூறு கோடி ரூபாய்க்கான ரசாயன கம்பெனிகள், நாட்டு வளர்ச்சிக்கு அத்தியாவசிய மானவை; சந்தேகமே இல்லை. அதேபோல் குளத்தைத் தூர் எடுப்பதும் அந்தச் சின்னக் கிராமத்துக்கு அவசிய மானது—முக்கியமானதுதான் என்பதனாலேயே நான் தடுமாறவில்லை.

கிராமத்துக்குப் போனோம்.

மயிலாடுதுறை ஏ.வி.சி. கல்லூரி மாணவர்களும், ஆசிரியர்களும், ஆறுபாதி பஞ்சாயத்து போர்டு தலைவரும், கிராமவாசிகளும், விளநகர் ஆறுபாதி கிராமத்து மிராசுதார்களும், இளைஞர்களும்... கடப்பாரையையும், மண்வெட்டியையும் பிடித்துக் கொண்டு குளத்தை ஆழப்படுத்திக் கொண்டிருந்தார்கள். நாங்கள் மண் சுமந்தோம்.

இளைஞர்கள் களைத்துக் கரையில் நின்றபோதெல்லாம், "காந்திஜி இதைக் கண்டு சந்தோஷப்படுவார்!" என்று உற்சாகப்படுத்தினேன்; என்னையும் உற்சாகப்படுத்திக்கொண்டேன்.

நண்பர்களே! இந்தத் தீபாவளிப் பொன்னாளில் உங்களிடம் நான் சொல்ல முடியும்! நாட்டில் நிலவும் அவல நிலைகளைக் கண்டு அயரவேண்டாம். இருளகற்றி வழி காண்போம். நாம் இருக்கும் இடத்தில், நம்மால் ஆன நல்ல காரியங்களைச் செய்வோம். கிராமத்துக் குளங்களைத் தூர் எடுப்போம். நிலத்தடி நீரை உயர்த்துவோம். நல்ல எண்ணங்களும் செயலும் மட்டுமே நாட்டு மாற்றத்துக்கு வழிவகுக்கும்.

மாற்றங்கள் அடிமட்டத்திலிருந்து கிளம்பும்போதுதான் அவை நிரந்தரமாக இருக்கும். நன்மை தரும்!

நம்புங்கள், நம்மால் முடியும்!...

2





## ஆக்கிரமிப்பும் தருமமும்

"என்ன தம்பி! எழுதிக்கிட்டே இருக்கிங்களே! எழுத்து முலம் இந்தச் சமுதாயத்தை மாத்திட முடியுமா...?'' என்று கேட்ட கிராமவாசி, "தம்பி! நான் சொல்றேன், கேளுங்க. நீங்க சினிமா படம் புடிக்கோணும். சினிமாவிலே ஆக்ட் பண்ணோணும். அப்பத்தான் இந்த ஜனங்க மனத்தை எல்லாம் சீக்கிரம் மாத்தலாம்!'' என்று என்மீதுள்ள அன்பினால் யோசனை கூறினார்!

கிராம மக்கள் எல்லோரும் விஷயம் தெரியாதவர் கள் என்றும், படிப்பில்லாதவர்கள் என்றும், ஊமைகள்

வாயில்லாப் பூச்சிகள் என்றும் ஒரு பரவலான எண்ணம் நகரத்திலிருந்து வருபவர்களிடம் தென்படுகிறது. உண்மையில் கிராம மக்கள் எல்லாம் தெரிந்துதான் வைத்திருக்கிறார்கள். இதுதான் எதிர்காலத்துக்குத் தெம்பு தரும் செய்தி.

"அழிச்சாட்டியம் பண்றானுவ...பொது இடத்துலே கோயில் நிலத்துலே குடிசை போடறானுவ...அதிலே கட்சிக் கொடியை நட்டுடறானுவ. அப்பாலே யாராவது 'ஏண்டா இப்படி ஆக்கிரமிப்பு பண்ணிட்டீங்க'னு கேட்டா, உள்ளூர் கட்சிக்காரன், எம்.எல்.ஏ. எல்லோரையும் கொண்டாறானுவ...அக்குறும்பாயிருக்குது."

"பாருங்க தம்பி. நம்ம பொய்யாக் குளத்திலே ஒரு வீட்டு வாசப்படி மாதிரி வழி வெச்சுட்டு ரெண்டு பக்கத்திலேயும் குளத்துக்குள்ளே வேலி போட்டுக் கத்திரி, வாழை வெச்சுட்டானுவ..."

"குளம் தருமபுரம் மடத்துக்குச் சொந்தமுங்க. இதெல்லாம் கேப்பாரில்லே. நெலம் வெச்சிருக்கிறவன் கோயிலுக்குச் சரியா படி அளக்கிறதில்லே. நம்மகோயில் குருக்களுக்கு நாலு மாசமா சம்பளம் குடுக்கலே..."

மறுநாள்.

இளைஞர்களும் நல்லவர்களும் அன்று வேகமாகச் செயல்பட்டார்கள். மறுநாள் தருமபுரத்து மடத்து அதிபர் குளத்தை வந்து பார்வையிட்டார். குளத்தைத் தூர் எடுத்திருப்பதைப் பார்த்து ஊர்க்காரர்களைப் பாராட்டினார். தான் ஒரு ஆயிரம் ரூபாய் தூர் எடுக்கும் வேலைக்காகக் கொடுப்பதாக அறிவித்தார். குளத்தை ஆக்கிரமித்து, வேலி போட்டுக் குடிசை எடுத்திருப்பதைப் பார்வையிட்டார்.

"குடிசை போட்டிருப்பவர்களுக்கு வேறு இடம் கொடுப்போம். குளத்தையும் நடைபாதையையும் ஆக்கிரமித்துப் போடப்பட்டுள்ள வேலிகளை எல்லாம் பிரியுங்கள்!" என்றார்.

மறுநாள் ஆக்கிரமிப்பு வேலிகளை அப்புறப்படுத்தி இருந்தார்கள்.

எனக்கு பாரதியின் பாடலொன்று நினைவுக்கு வந்தது.

'.........இவ்வா றங்கே
செம்மையெலாம் பாழாகிக் கொடுமையே
அறமாகித் தீர்ந்த போதில்
அம்மைமனங் கனிந்திட்டாள்...'

கிராமத்துக் குளத்து ஆக்கிரமிப்பை அகற்றியது சின்ன விஷயமாய் இருக்கலாம். ஆனால், அது தருமம் வெல்லும் என்ற சிலிர்ப்பை ஊர் மக்களிடையே ஏற்படுத்தியது.

"ஏங்க, மயிலாடுதுறை ஷுகர்ஸ் ஆலை எங்கே இருக்கு...?"

"அது இப்ப மயிலாடுதுறை ஷுகர்ஸ் இல்லிங்க. நடிப்பிசைப்புலவர் கே.ஆர். ராமசாமி சர்க்கரை ஆலைங்க..."

"தோ பாருங்க! இதை நாம சும்மா வுடக்கூடாது. பெரிய நடிகர் காளி என். ரத்தினத்தை அநியாயமா மறந்துட்டாங்க. அவர் பூசாரி வேடம் போட்டு சாமி ஆடினார்னா ஒரு பய கிட்ட வர முடியாது. ஒண்ணு, இந்த நடிப்பிசைப் புலவர் கே.ஆர், ராமசாமி சர்க்கரை ஆலைங்கறதை மாத்தி காளி என். ரத்தினம் ஷுகர்ஸ்னு

ஆக்கணும். இல்லாட்டி, காளி என். ரத்தினத்துக்காக வேறே ஒரு ஷுகர் மில்ஸ் இதே மாயவரத்துலே கட்டணும். இதான் நம்ம கோரிக்கை. நாம போராடப் போறோம்!''

"அண்ணே! 'மந்திரிகுமாரி' படத்துலே மாதுரிதேவி நடிக்குமே, நாம அதையும் மறந்துடக்கூடாது!"

"கூடாது. கூடாது. அது அடுத்த கட்டப் போராட் டம். இப்படிப் பழைய சினிமா நட்சத்திரங்களையெல் லாம் கவர்மெண்டு மறந்துடறதுன்னா, நாம சும்மா இருக்க முடியுமா...?"

எங்கள் ஊரில் இவ்வளவு போராட்டத் தியாகிகள் இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாமல் போய் விட்டது!

"நம்ம டி. ராஜேந்தர் எல்லாம் இந்தப் பக்கம்தான் தம்பி. நம்ம ஊர்தான்!"

"அடேடே...!"

"நம்ம ஊர் வரப்பு மேலே எல்லாம் அவர் நடந் திருக்காரு."

"அடடா...! அவ்வளவு புண்ணிய பூமியா இது...?"

"தம்பி, ஆனா ஒரு விஷயம். அவரு இப்ப எதிர்க் கட்சி. நாம கண்டுக்காம இருந்துடறது நல்லது."

எனக்கு அவர் சொன்ன சாணக்கிய தந்திரத்தில் மதிப்பேற்பட்டது.

"என்னங்க! மாயவரத்துலே ஷுகர் மில்ஸ் போட்டுருக்காங்களே. ஊர் நல்லா தொழில்மயமாவுது போலிருக்கே!"

"ஆமாங்க! நம்ம ஐயாவும் இன்னும் பல பேரும் சேர்ந்து பதினாலு சினிமா கொட்டா கட்டியிருக்காங்க. நம்ம ஊர் எம்.எல்.ஏ. ஐயாகூட சினிமா கொட்டகை கட்டியிருக்காங்க!"

"உற்பத்தி பெருகிடும்னு சொல்லுங்க!"

அவர் முண்டாசை அவிழ்த்துக் கக்கத்தில் வைத்துக் கொண்டார். வெட்கத்துடன் தலையை நிலம் நோக்கி கவிழ்த்துக் கொண்டே சொன்னார் :

"சினிமா பார்த்தா நம்ம ஊர் காசுதாங்க வெளி யூருக்குப் போவுது!"

சாலையில் இரண்டு, மூன்று போலீஸ் லாரிகள் போய்க்கொண்டிருந்தன. விஷயம் என்னவென்று விசாரித்ததில், மறியல் போராட்டம் என்று தெரிய வந்தது. இதற்குள் சில இளைஞர்கள் ஓடிவந்தார்கள்.

"ஒரு பிள்ளைத்தாச்சிப் பொண்ணை டாக்ஸில ஆஸ்பத்திரிக்கு எடுத்துக்கிட்டுப் போறாங்க. இந்தப் பயலுவ வழிவிட மாட்டேங்குறாங்க. டாக்ஸி ஓட்டக் கூடாதாம்...அந்தப் புள்ளை பின் சீட்டிலே துடிச்சுக்கிட் டிருக்கு. இவனுவ 'மறியல்னா மறியல்தான், இன்னிக்கு முழுக்க கடையடைப்புதான்...எல்லாம் உள்ளூரிலேயே பிரசவம் பார்த்துக்கச் சொல்லுங்க'னு பெரிசாப் பேசறானுவ..."

"அடப் பாவிங்களா..."

அதற்குள் மற்றோர் இளைஞர் ஓடிவந்தார்.

"எல்லாம் சரியாயிட்டுது. வண்டியை வுட்டுட் டானுவ..."

"எப்படி வுட்டானுவ...?"

"நான் போய்ப் பக்கத்து வீட்டிலே இருந்த பொம்பளைங்களை எல்லாம் அழைச்சுக்கிட்டு வந்து, 'ஏம்மா, உங்க வீட்டிலேஇப்படி உங்க பொண்ணுக்கு ஆச்சுன்னா சும்மா இருப்பீங்களா'னு கேட்டேன். அவ்வளவுதான். அத்தனைப் பொம்பளைங்களும் 'அட யார்றா அவன்? உங்க வீட்டிலே அக்கா தங்கச்சி இல்லே? அயோக்கியப் பசங்களா!'னு சொல்லிட்டு அத்தனை பேரும் கையிலே கெடச்சதை எடுத்துக்கிட்டு கிளம்பினாங்க பாருங்க! எல்லாப் பயலும் 'கப்சிப்'. வண்டி போயிட்டுது மாயவரத்துக்கு..."

அந்தப் பெண்மணிகளும் எங்கள் கிராமம்தான்!

வன்முறைகள். போராட்டங்கள், பொதுச்சொத்துக்களை அழித்தல் இவையெல்லாம் அரசாங்கத்தின் ஆசியுடனும், ஆதரவுடனும் நடத்தப்படுவன என்கிற சந்தேகத்தை, சமீபத்தில் நடந்த பல சம்பவங்கள் நிரூபித்தன. "எந்த முடிவை எடுத்தால் நாம் மாட்டிக் கொள்ள மாட்டோம்!" என்கிற பயம் ஆட்சியாளர்களை முடக்கி இருக்கிறது என்பது தெரிந்தது. "நான் பொறுப்பல்ல" என்று தன்னை விடுவித்துக் கொள்ளும் மனப்பக்குவத்தை மேலிடத்தில் காண முடிந்தது.

எனக்கு அதிசயத்திலும் அதிசயம். எங்கோ அமைதியாக, காவேரி நதியின் பாய்ச்சலில் ஓர் அழகிய சிவன் கோயில், ஒரு பெருமாள் கோயில், இரண்டு மாரியம்மன் கோயில்கள், ஒரு காத்தவராயன் கோயில், ஊரிலே ஆறு குளங்கள்; ஒரு வாய்க்கால் என்று ஆரவாரமில்லாமல் ஓடிக்கொண்டிருந்த ஓர் அற்புத கிராமம், இப்படி இன்று வன்முறைக்குப் பெயர் எடுத்துவிட்டதே என்ற வருத்தம் தான்.

''ஊரில் எத்தன் எத்தனை பேர்? நாலு பேர். நல்லவர்கள் எத்தனை பேர்? நாற்பது பேர். நல்லவர்கள் நாற்பது பேரானாலும் நமக்கென்ன என்று இருக்கும் போது நாலு எத்தர்களும் நாற்பதினாயிரம் எத்தர்கள் போல ஆர்ப்பாட்டம் செய்வார்கள்! அந்த நாலு எத்தர் களைப் பிடித்தால் போதும். நாடு திருந்திவிடும்!'' என்பார் எனது நண்பர் கவிஞர் திருமலைசாமி.

ஊருக்குள் போலீஸ் வேன் வந்து போலீஸார் இறங்கினார்கள். அவ்வளவுதான்...கூட்டம் புற்றீசல் போல் பறந்தோடிப் போய்விட்டது.

இதைக் கேட்ட எனக்கு மகாத்மா காந்தியின் வாழ்வும், அவர் நடத்திய சத்தியாக்கிரகமும்தான் நினைவுக்கு வந்தன.

உப்பு சத்தியாக்கிரகத்தில் இறங்கிய வீரர்கள் போலீஸ் தடியடிக்கு ஈடுகொடுத்தார்கள். தடை உத்தரவை மீறப்போகிறோம் என்று போலீஸ்முன் நின்றார்கள். அடிபட்டார்கள். சிறைப்பட்டார்கள். ஓடிப் போகவில்லை. அவர்கள் வீரர்கள்.

இவர்களோ, போலீஸைக் கண்டவுடன் ஓடிப் போனார்கள்! கோழைகள்! எனக்கு கவிஞரின் ''ஊருக்கு எத்தன் எத்தனை பேர்?'' என்ற வாசகங்கள்தான் நினைவுக்கு வந்தன.

மறுநாள் கிராமத்தில் கூட்டம் நடந்தது. அப்போது ஒரு பெரியவர் எழுந்து பேசினார்: ''இந்த ஊரில் இருக்கும் நாம்பாரம்பரியம் மிக்கவர்கள். படித்தவர்கள். பண்புள்ள வர்கள். ஊரின் நன்மைக்காகப் பணத்தைக் கொடுப்பவர் கள். பாடுபடுபவர்கள். நாம் ஒதுங்கிவிட்டதனால் இன்று உபயோகமற்ற காலிகள் ஊரின் பெயரைக் கெடுக் கிறார்கள்.

"நல்லவர்கள் தலைமை ஏற்கத் தயங்கும்போது உண்மைக்காக, நியாயத்துக்காகப் போராட முன்வராத போது அராஜகர்கள் கையில் நாடு போய்விடுகிறது. இது நடக்க, இனி நாம் விடக்கூடாது! நாட்டுக்கும் சரி, இது கிராமத்துக்கும் சரி!"

ஆமெனப் பொழிந்தது மேகம்! ஓம் என உறுமிற்று வானம்!




## தஞ்சை—நீ ஒரு நோஞ்சை!

மாற்றங்கள் அடிப்படையில் கிராம மட்டத்தில் நிகழ்ந்தாலொழிய நாடு முன்னேறாது என்பது என் முடிவு. நமது அடிப்படை கிராமம்தான். கிராமத்து மக்கள் போடும் வோட்டுதான் ஒரு தலைவனைப் பதவியில் வைத்திருக்கிறது. ''அவர்கள் நிச்சயம் எனக்குப் போடுவார்கள்'' என்ற அசைக்கமுடியாத நம்பிக்கையில் தான், அமைச்சர்களை 'செஸ்' காய்களாகவும், அதிகாரிகளை வேலைக்காரர்களாகவும் நடத்தும் ஆணவ மனோபாவம் அவனுள் உண்டாகிறது.

யார் இந்தக் கிராம மக்கள்...?

அவர்களுடைய ஆசைகள், லட்சியங்கள், குணாதிசயங்கள் என்ன?

அவர்களுடைய பிரச்னைகள் என்ன? எதிர்பார்ப்பு கள் என்ன?

தஞ்சையை எடுத்துக் கொள்வோம். அவர்கள் விவசாயிகள்—எழுபது சதம். சொந்தமாக விவசாயம் செய்வோர் 40, 50 சதம் எங்கள் கிராமத்தில் இருக்க லாம். மற்றெல்லோரும் கூலிக்கு வேலை செய்பவர்கள்.

இவர்களுக்கிருக்கும் பெரும் எதிர்பார்ப்பு, தங்கள் குழந்தைகள் நன்கு படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதுதான். படிக்கப் பள்ளிக்கு அனுப்புகிறார்கள். குழந்தைகளுக்குப் படிப்பு வராதபோது, அல்லது அதில் ஈடுபாடு ஏற்படாதபோது அதை அப்படியே விட்டுவிடு கிறார்கள். ஒன்றாம் வகுப்பிலிருந்து மூன்றாம் வகுப்புக்குள் பள்ளியிலிருந்து நின்றுவிடும் குழந்தைகள் ஏராளமாய் இருக்கிறார்கள்.

கட்டாயக் கல்விமுறை இன்று இல்லை. மேனாடு களில் இருக்கிறது.

அதற்கு ஈடாக, படிப்பார்வம் இல்லாத குழந்தை களை—படிப்பிலிருந்து நின்றுவிடும் குழந்தைகளை— எடுத்து அவர்களுக்குத் தனிப் பயிற்சியளிக்கும் தனி ஆசிரியர்களைக் கொண்டதாக நமது பள்ளிகள் இல்லை —மேனாடுகளில் இருக்கிறது.

விவசாயிகளும் சரி, கூலிக்கு வேலை செய்பவர் களும் சரி; முழுக்க முழுக்க விவசாயத்தை நம்பியே வாழ்க்கையை நடத்துகின்றனர். காலந்தவறாது மழை பெய்யும் ஆண்டுகளில், எல்லோரும் தங்களுக்குப் போது மான ஓர் அடிப்படை வருமானத்தைப் பெற்று வாழ்கிறார்கள்.

இன்று, சில ஆண்டுகளாகக் காவிரி நீர் இல்லை. இது எதிர்பாராது ஏற்பட்ட நிகழ்ச்சி. அதைப் போக்க, தஞ்சை மாவட்டத்துத் தலைவர்களும் நடவடிக்கைகள் மேற்கொள்ளவில்லை. தமிழ்நாட்டு அரசாங்கமும் அதை அதிகம் பொருட்படுத்தியதாக—அதன் விளைவு களை உணர்ந்தவர்களாகத் தெரியவில்லை. தமிழ் நாட்டின் நாற்பது சதவிகித உணவுத் தேவையைத் தஞ்சை மாவட்டம் பூர்த்தி செய்கிறது. தமிழ்நாட்டுக்கு உணவளிப்பது தஞ்சைதான்.

மழையின்மை—காவிரியில் தண்ணீரின்மை—காரண மாக, தஞ்சை மாவட்டத்தில் பெரும் பாதிப்பு ஏற்பட் டுள்ளது. கூலிக்கு வேலை செய்வோர் வருமான மில்லாது போவார்கள். சொந்தமாகப் பயிரிட்டு விவசாயம் செய்வோர் நஷ்டமடைவார்கள் அல்லது வருமானமில்லாது போவார்கள். இவர்களை நம்பி உப தொழில்கள் செய்யும் டீக்கடை, மளிகைக் கடை போன்றோர் தொழில்கள் நசித்துவிடும்.

தஞ்சை மாவட்டம், தொழில்துறையில் மிகவும் பின்தங்கிய மாவட்டமாக அறிவிக்கப்பட்டிருக்கிறது. தஞ்சை மாவட்டத்தை, தொழில்மயமாக்க அதன் பிரதி நிதியாக எந்தத் தொழிலமைச்சரும் இல்லை அமைச்ச ரவையில். அமைச்சர்கள் நெடுஞ்செழியன், திருநாவுக் கரசு போன்றோர் மாநிலம் தழுவிய அரசியலில் (நான் நம்பர் 'ஒன்'னா அல்லது 'டூ' வா என்பதிலோ, நான் வீரப்பன் கட்சியா, ஜெயலலிதாவின் கட்சியா என்ப திலோ) காட்டும் அக்கறையில் ஆறில் ஒரு பங்கைக்கூட இவர்கள் தஞ்சை மாவட்டதைப் பற்றி எண்ணிய தில்லை—இப்படி ஒரு சந்தேகம் எனக்கு.

இதைவிடக் கேவலமான விஷயம் தஞ்சை மாவட்டத்துப் பெருமக்கள் படித்தவர்கள், அதிகாரிகள், பிரமுகர்கள், பெருங்குடி மக்கள் யாவரும் தஞ்சை மாவட்டத்தைப் பற்றிக் கவலைப்படாது—அக்கறை எடுத்துக்கொள்ளாது—தலைமை ஏற்றுக்கொள்ளாது அசட்டையாய்ப் போய்விட்ட அவலம்தான்.

இதில் விந்தையிலும் விந்தை இந்தத் தஞ்சை மாவட்டத்து மாமனிதர்கள் இருவர்தான் இன்று அகில இந்தியாவையும், நேரடியாகவும் மறைமுகமாகவும் ஆள்கிறார்கள். நமது இந்தியாவின் நாற்பதாண்டு சரித்திரத்தில் இதுவரை ஒரு தமிழன் ஜனாதிபதி பதவியை வகித்ததில்லை. இன்று முதல் முறையாக ஒரு தமிழ்ப் பெருமகன் ஆர். வெங்கட்ராமன் இந்தியாவின் ஜனாதிபதியாக டில்லியில்—நமது தலைநகரில்—கோலோச்சுகிறார். அவர் தஞ்சைக்காரரர். பட்டுக்கோட்டை—ராஜாமடத்தைச் சேர்ந்தவர்.

அடுத்ததாக, இந்திய நாட்டின் ஆளும் கட்சியான காங்கிரஸின் தலைமைப் பதவியை வகித்து டில்லியிலேயே அரசியல் சூத்திரக்கயிற்றை ஆட்டுவிக்கக்கூடிய நிலையில் இருப்பவர், நமது தஞ்சை மாவட்டத்து மண்—ஜி.கே.மூப்பனார்.

இப்படி நமது மாவட்டத்திலிருந்து என்றாவது டில்லியில் இப்படி இவர்கள் மிக முக்கிய பதவிகளிலிருந்து நாட்டை ஆளும் பொறுப்பு இனி ஒருமுறை தஞ்சைக்குக் கிடைக்குமா? கிடைக்காது. இன்னும் ஆயிரம் ஆண்டுகள் ஆகலாம்.

அவர்கள் இருவரும் விரும்பினால், ஆசைப்பட்டால், குறிக்கோளுடன் செயல்பட்டால்—மனது வைத்தால்—இந்தக் காவிரி நீர்ப் பிரச்னையைத் தீர்க்க எத்தனை நிமிடங்கள் ஆகும்? யோசித்துப் பாருங்கள்.

இவர்களை இன்று விட்டுவிட்டால் இதைப்போன்ற ஒரு பொன்னான சந்தர்ப்பம் தஞ்சை மாவட்டத்துக்கு மீண்டும் வருமா? யோசித்துப்பாருங்கள்.

இதை நமது இரு மாபெரும் தலைவர்களும் உணர்ந்திருக்கிறார்களா—தாங்கள் செய்யும் சிறு காரியங்கள்கூடச் சரித்திர முக்கியத்துவம் பெறும் நம் மாவட்டத்துக்கு என்பதை உணர்ந்து செயல்பட்டிருக் கிறார்களா—யோசித்துப் பாருங்கள்.

தஞ்சை மாவட்டத்து மக்கள்தான், "அடாடா! இப்படியோர் அற்புத அமைப்பு, இரண்டு மாமனிதர்கள் வடிவில் டில்லியில் இருக்கும்போது நாம் அவர்களைப் பயன்படுத்துவோம், நமது குறைகளை முன்வைப் போம், நல்லது செய்ய நெருக்குவோம், வேண்டுவோம், நிர்ப்பந்திப்போம்!" என்று என்றாவது எண்ணினார் களா? ஒன்று கூடினார்களா? செயல்பட்டார்களா? சிந்தித்துப் பாருங்கள்.

தன்னைப் பற்றியும் தமிழ் மக்களைப் பற்றியும் கவலைப்படாத குணம்தான் தமிழ் மகனின் ரத்தத்தில் ஓடுகிறதோ என்ற சந்தேகம் எனக்கு ஏற்படுகிறது.

தாது வருஷப் பஞ்சம் என்று என் தந்தை சொல்லக் கேட்டிருக்கிறேன்; சுமார் எழுபதாண்டுகளுக்கு முன் ஏற்பட்ட ஒரு பஞ்சத்தைப் பற்றி.

இன்று நாம் அந்தப் பழங்காலத்தில் இல்லை. காரும் அரசாங்க ஜீப்பும் விமானமும் ரயிலும் படைத் திருக்கிறோம். இருபதாம் நூற்றாண்டில் விஞ்ஞான யுகத்தில் வாழ்கிறோம்.

கடந்த இருபதாண்டுகளில் தமிழ்நாட்டுக்கு ஒரு பொருளாதாரத் திட்டம் (Economic Planning) உண்டா

நம்மிடம்? தலைநகரில் தண்ணீர் பஞ்சம் நிரந்தரமாகப் பத்தாண்டுகளாகத் தொடர்ந்துவருகிறதே, ஏதேனும் வழி கண்டார்களா நிரந்தரமாக? குடிசைமாற்று வாரியம் என்னும் பேரில் தலைநகர் பூராவையும் ஒரு பெரிய சேரியாக மாற்றி, தண்ணீர்த் தேவையையும், மின்சாரத் தேவையினையும் அதிகப்படுத்தியிருக் கிறோமே, இதுவா புத்திசாலித்தனம் என்று என்றாவது சுய சோதனை செய்துகொண்டார்களா? எதிர்காலம் நம்மை நோக்கி வருவது தெரிந்தும், எதற்கும் நிரந்தர வழி கண்டுபிடிக்காமல் அன்றாடங்காய்ச்சிபோல் அவ்வப் போது தற்காலிகத் தீர்வு காண்பதா அரசியல் தலைமை...?

பொறி இயலாளர் சங்கமும், மாநில வழக்கறிஞர்கள் சங்கமும், கல்லூரிப் பேராசிரியர்கள் கழகமும், மாநில விஞ்ஞானிகள் அமைப்பும் இந்தத் தமிழ்நாட்டில்தான் செயல்படுகின்றனவா?

நல்லவர்களும், படித்தவர்களும், நாட்டின்பால் அக்கறை கொண்டோரும்தான் இங்கே வாழ்கிறார் களா?

இருக்க முடியாது.

இருந்தால், அவர்கள் பூச்சி புழு ரூபத்தை எடுத்து வாழ்கிறார்கள் போலும்.

தம்பீ! இந்த நாட்டின் நிலை நாளைக்கு உன் தலையில் விடியப் போகிறது. உன் பிள்ளைகள், பேரக்குழந்தைகள், சந்ததிகள் தலையில் விடியப் போகிறது. "ஊமையர்களாய், செவிடர்களாய், குருடர் க்ளாய் வாழ்ந்தார்கள் எம் தந்தையர்" என்ற இழி சொல் உன்னைத் தொடவேண்டாம்.

'இது பொறுப்ப தில்லை—தம்பி!
எரி தழல் கொண்டு வா!
கதிரை வைத்திழந்தான்—அண்ணன்
கையை எரித்திடுவோம்!'

என்ற வீர பாரதியின் வாசகத்தைப் படி. அயோக்கியத் தனத்தின் கையை எரிக்கவேண்டிய நேரம் இது.

கெட்டவற்றைப் பொசுக்கித் தீ மூட்டிப் புகை எழுப்புவது கெட்ட காரியமல்ல. நம்மால் முடியும் தம்பி—நம்பு. இந்தச் சமுதாயத்தின் கேடுகளை நம்மால் களைய முடியும்; நாம்தான் களையவேண்டும். எழு.




# 4

## 'கெவுர்மெண்ட்' பார்த்துக்கொள்ளும்!

கிராமத்துத் தேவைகளை அறிய, கிராமத்தின் கையிருப்புகளைப் புரிந்துகொள்ள ஒரு சர்வே செய்தால் நல்லது என்று தீர்மானித்தோம். எவ்வளவு பேர் படித்தவர்கள்; எவ்வளவு பேர் வயதானவர்கள்; எவ்வளவு பேர் வேலைக்குப் போகிறார்கள்; கிராமத்தில் கிடைக்கும் மூலப்பொருட்கள் என்ன—இவை பற்றிய விவரங்கள் தெரிந்தால், ஒரு வளர்ச்சித் திட்டம் வகுக்கச் சௌகரியமாயிருக்கும் என்று எண்ணினோம்.

"இப்படிக் கேள்வி கேட்டு எங்ககிட்டேருந்து விஷயத்தைத் தெரிஞ்சுக்கிறீங்களே, இதிலே எங்களுக்கென்ன ஆதாயம்...?"—என்று ஒரு கிராமவாசி கேட்டபோது, எனக்குத் தூக்கிவாரிப்போட்டது.

"ஐயா! இதெல்லாம் தெரிந்து கொண்டால்தான் என்ன செய்யலாம் என்பதுபற்றி முடிவெடுக்கலாம்."

"அதெல்லாம் ஏங்க வீண் வேலை. பாங்க்கிலே லோன் குடுக்கிறாங்களாம். அதுக்கு ஏற்பாடு பண்ணிட்டுப் போங்க!"

"ஏம்ப்பா! பாங்க்கிலே கடன் வாங்கினா, திருப்பிக் கொடுக்க வேணாமா?"

"எதுக்குக் கொடுக்கணும்...? இதென்ன, இவங்க அப்பா வூட்டுச் சொத்துங்களா? கெவுர்மெண்டு பணந் தானுங்களே!" என்று பதில் வந்தது. நான் அயர்ந்து போய்விட்டேன்.

கிராமத்து மக்கள் விஷயம் தெரிந்தவர்கள் என்று தான் எண்ணிக்கொண்டிருந்தேன் இதுவரை. இப்போது எவ்வளவோ 'விஷயங்களைத்' தெரிந்து வைத்திருக்கிறார்களே என்ற அதிர்ச்சியும் ஏற்பட்டது.

காம்பு இல்லாத மாட்டைக் காட்டி 'லோன்' வாங்கி இருக்கிற விஷயத்தை ஒருவர் கதையாகச் சொன்னார். வீட்டுக் கூரையைப் பிரித்துப் போட்டுச் சுவரில் வெந்நீரை ஊற்றிக் கரையவிட்டு, 'மழை பெய்ததில் (?) வீடு சேதமடைந்தது' என்று சொல்லி 'லோன்!'

நியாயமாக உழைத்துத் தன் உழைப்புக்கேற்ற ஊதியத்தைப் பெற்றுப் பெருமையுடன் வாழ்ந்தவர்களா இவர்கள்? அப்பாவிமக்கள் என்று எண்ணி ஆதங்கப் பட்டோமே, அவர்கள்தானா இவர்கள்? அரசாங்கம் எல்லாம் கொடுக்கும் என்ற மனோபாவத்தை இவர்கள் எங்கே பெற்றார்கள்?

'ஏ! தாழ்ந்த தமிழகமே!' என்றார் அறிஞர் அண்ணா.

'ஏ! தாழ்ந்த உள்ளங்களே! வக்கிரமாகிவிட்ட நெஞ்சங்களே! உழைக்காமல் உண்ண விரும்பும் உபயோகமற்ற இனமாய் என்று ஆனீர்கள்? பிச்சைக்கார மனோபாவத்தை எங்கே பெற்றீர்கள்?' என்று கதற வேண்டும் போலிருந்தது எனக்கு.

'யாருக்குக் கடன் கொடுக்கலாம்? கடனைப் பயனுள்ள வழியில் உபயோகித்துப் பலன் பெறுவார்களா?' என்பதை எல்லாம் சிந்திக்காத லோன்மேளா! இலவசச் சாப்பாடு...இலவசச் செருப்பு...இலவசப் பல் பொடி!

வேலையில்லாதோருக்கு வேலை வாய்ப்பு தருவதற்குப் பதில் சம்பளம்போல் மாத மான்யம். அதாவது, சும்மா இருப்பதற்குச் சம்பளம்! மக்களுக்கு வேஷ்டி, புடவை, அரிசி இனாம்! ஏன்? அமாவாசைக்கும் பௌர்ணமிக்கும் இனாம் கொடுக்கக்கூடாதா என்ற ஏக்கத்தைக் கிராமமக்களின் கண்களில் கண்டேன்!

இதெல்லாம் நல்ல காரியங்கள், தர்ம காரியங்கள், மனிதாபிமானம் கொண்டவைதான். ஆனால் இதெல்லாம் அரசாங்கம் செய்யவேண்டிய திட்டங்களல்ல. தர்மஸ்தாபனங்கள் செய்யவேண்டியவை.

அரசாங்கம் இதைச் செய்வதால் உழைப்பில் நம்பிக்கை கொண்டிருந்தவனிடம் ஒரு பிச்சைக்கார மனோபாவத்தை உருவாக்கியிருக்கிறோம். 'பிள்ளை பெத்துவிட்டால் போதும், எல்லாம் 'கெவுர்மெண்டு' பார்த்துக்கொள்ளும்!' என்று சார்ந்து நிற்கிற மனோபாவத்தை வளர்த்துவிட்டிருக்கிறோம். சலுகையையே அவன் உரிமை என்று நினைக்கிறான்.

எண்ணங்கள் நல்லவையாக இருந்தாலும், செயல் முறையின் கோளாறு காரணமாக, 'நியாயமில்லாத ஒரு வாழ்க்கை தர்மத்தை அரசாங்கம் பரவவிடுகிறது. மனிதனைத் தன் காலிலேயே நிற்கச்செய்வதற்குப் பதில் அவன் காலொடித்துக் கையில் திருவோட்டை அளித்து, "திருவோட்டைப் பத்திரமாக வைத்திரு. நான் வருகிறேன் அடிக்கடி!" என்று சொல்லிவிட்டோம். சொல்லி வருகிறோம்.

தமிழ்நாட்டில் 50 சதவீத மக்கள் அடிப்படை வருவாய்க்கோட்டின்கீழ் வறுமையில் வாழ்கிறார்கள் என்பது உண்மையானால், இந்த 50 சதவீத மக்களின் மனோபாவமும் பிச்சைக்கார மனோபாவமாக உருவானால், இந்த நாடு எங்கே போகும்?

'கஞ்சி குடிப்பதற்கிலார்—அதன்
காரணங்கள் இவையென்னும் அறிவுமிலார்'

என்று பாரதி பாடிக்கொண்டிருந்தார்.

ஏழை மாநிலமாகிய தமிழ் மாநிலம், கையிருப்பைச் செலவழிக்கும் மாநிலமாக இருந்ததனால்தான், நமது சராசரி வருமானம் இந்திய சராசரி வருமானத்தைவிடக் கீழே போய்விட்டது என்கிறார் ப. சிதம்பரம்.

தவறுகளைப் பிறர் எடுத்துக்காட்டும்போது கோபப் படுவதோ, கட்சிச் சாயம் பூசுவதோ முறை அல்ல.

தவறுகளைத் திருத்திக்கொள்ள வேண்டும்.




## வளர்ச்சியின் காலகட்டங்கள்!

தனி மனிதனும் சரி, சமுதாயமும் சரி; வளர்ச்சியை நோக்கிப் பூரணத்துவம் பெறத்தான் படைக்கப்பட்டிருக்கிறது. அதற்கான வாய்ப்புதான் இந்த வாழ்வு.

முதலில் தோன்றிய மனிதனிலிருந்து இன்றைய நாகரிகம்வரை மனித சமுதாயம் வளர்ந்த கதையைப் பார்த்தோமானால், மனித வளர்ச்சி ஒவ்வொரு கட்டமாகத் தாண்டி வந்திருப்பது தெரியவரும். வளர்ச்சிப் பாதையில் போகாத சமுதாயங்கள் அழிந்து போயிருக்கின்றன. வாழத் தகுதியற்றவை அழிக்கப்படுகின்றன. தேவையற்ற உறுப்புக்கள் அகன்றுவிட்டன. இது நியதி.

நபிகள் பெருமான் வரும்வரை அரேபிய நாட்டு மக்கள் நாடோடிக் கும்பல்களாக, வல்லான் வகுத்ததே வாய்க்கால் என்ற ரீதியில் செயல்பட்டுவந்தனர். முகம்மது நபி ஒரு கட்டுப்பாட்டைக் கொண்டுவந்தார். வாழ்க்கை நெறிகளை உபதேசித்தார்.

இயேசுபிரான் வரும்வரை பணத்துக்குக் கடும் வட்டி வாங்கும் ஈட்டிக்காரர் போன்றவர்களே கோயிலில் வியாபித்திருந்தார்கள். அவர்களது கடைகளைத் தூக்கி யெறிந்து, வாழ்க்கை நெறிகளை ஆண்டவன் கட்டளை களாகப் பரப்பினார் இயேசு.

ஆடு மாடுகளைப் பலி கொடுத்துத் திருப்தியடைந்த மக்கள் சமுதாயத்தைக் கண்டித்து நல்ல சிந்தனை, நல்ல செயல் என்ற எட்டு வழிப் பாதையை உபதேசித் தார் புத்தர்பிரான். அது போலவே ஆதிசங்கரரும், ராமானுஜரும், ஆழ்வார்களும். நாயன்மார்களும் பக்தி யையும் தெய்வீகத்தையும் நன்னெறிகளையும் மக்களி டையே பரப்பினார்கள். சத்தியம், நீதி, நேர்மை, அன்பு போன்ற அடிப்படை வாழ்க்கை நெறிகளை எல்லா மதங்களும் போதித்தன. அது ஒரு முதல் காலகட்ட வளர்ச்சி.

இரண்டாவது காலகட்ட வளர்ச்சியில், அரசியல் விழிப்பு உணர்ச்சி ஏற்பட்டது. ஒரு படி மேலே சென்று, சுதந்திரம், சமத்துவம் என்ற கொள்கைகளுக்கு முக்கியத் துவம் கொடுத்தனர். இந்தச் சுதந்திர—சமத்துவ விழிப் புணர்வின் காரணமாகப் புரட்சிகள் ஏற்பட்டன. மக்கள் தங்கள் உரிமைகளைப் பற்றி நினைவு வந்தவர்களாய்ப் பேசவும், எழுதவும் தலைப்பட்டார்கள்.

சுதந்திர உணர்வின் காரணமாகப் பல சுதந்திர நாடுகள் அடிமைத்தனத்திலிருந்து விடுபட்டன. இந்தச்

சுதந்திர உணர்வு நாட்டுடன் நிற்காமல், தனிமனிதனின் அடிப்படைச் சுதந்திரம்வரை சென்று எல்லா நாடுகளின் அரசியல் சாசனத்திலும் இடம் பெற்றது.

இனி வரப்போகும் நிலைதான் சமுதாயத்தின் மூன்றாவது காலகட்ட வளர்ச்சியாகும். இந்த மூன்றாவது காலகட்டத்தில், மனிதன் தன்னைப்பற்றி அதிகம் சிந்திக்கத் துவங்குவான். மனிதன் தன்னிடமுள்ள ஆற்றல்களை வளர்க்க முற்படுவான். மனிதத் திறமை களின் எல்லைகளை மேலும் மீற முயல்வான்.

இதன் அறிகுறிகளை இன்று நாம் காண்கிறோம். மாரடைப்போடு மருத்துவம் போராடுவதைக் காண் கிறோம். இன்று இதயத்தில் கிளைக் குழாய்களை ('பை பாஸ்') வைத்துத் தைத்து அறுவை சிகிச்சை செய்கிறார் கள். மனிதனின் ஜீவிய காலத்தை மருத்துவர்கள் அதிகமாக்கி இருக்கிறார்கள்!

ராக்கெட்டுகள் இன்று சர்வ சாதாரணமாகி விட்டன. சந்திர மண்டலப் பயணம் என்ற நம்ப முடியாத அதிசயம், ஓர் இயல்பான சாதனையாக மாறிவிட்ட நிலை இன்று.

அதாவது, மனிதன் தன் எல்லைகளை மீறுகிறான்.

'இது முடியும், இது முடியாது!' என்று மனிதன் வகுத்துக்கொண்ட எல்லைகளெல்லாம் சரிகின்றன. மனித ஆற்றல் இன்று ஒரு புதிய பரிமாணத்தில் விஸ்வரூபம் எடுக்க ஆரம்பித்திருக்கிறது. மனிதன், ஒரு நாள் தன் முழுத் திறமைகளையும் உபயோகிக்கும் அசாதாரண மனிதனாக விளங்குவான் என்றால் ஆச்சரியப்பட ஏதுமில்லை. மனிதன் தேவ நிலையை அடையலாம் என்று இந்துமதம் சொல்வது அதுதானே?

இன்று தனி மனிதன் தனது திறமைகளையும் மன இயக்கங்களையும் ஆற்றல்களையும் வெளிக்கொணரத் தவிக்கும் ஒரு துவக்கப் படியில் நிற்கிறான். இதுதான் மனித இனத்தின் மூன்றாவது காலகட்ட வளர்ச்சிப் படி என்று நான் நினைக்கிறேன்.

தனி மனித ஆற்றல்களை உணர்ந்து அதை வெளிக் கொணரும் புதிய (Human Potential Movement) முறை தான் இன்று நமக்குத் தேவை. நமது ஆற்றல்களை நாம் உணராததால்தான் 'நாடு இத்தகைய அவல நிலையில் இருக்கிறதே!' என்று அங்கலாய்க்கிறோம். எத்தகைய ஆற்றல்கள் இந்த மனித மனத்துக்குள்ளே புதைந்திருக்கிறது என்பதை உணராததால்தான் நாம் 'என்னால் என்ன செய்ய முடியும்?' என்று நம்மை நாமே தாழ்வாக மதிப்பிடுகிறோம்.

எனக்காக—எனது மகிழ்ச்சி—எனது திறமைகள்—எனது லட்சியங்கள்—என் வாழ்க்கை—எனது சாதனை கள் என்கிற ஓர் இயக்கத்தின் துவக்கத்தை இலை மறை காய்போல அமெரிக்காவில் என்னால் காணமுடிந்தது. இதை (Me Generation) "நான்—எனக்காக என்று, வாழும் இளைய பரம்பரை" என்று பத்திரிகைகள் எழுதின. இதைத்தான் (Self Awareness, Self Development, Self Realization) சுய திறமைகளின் விழிப் புணர்வு என்றும், சுய மேம்பாடு என்றும், சுய சக்தியின் சொரூபத் தரிசனம் என்றும் பல்வேறு பெயர்களில் செமினார் நடத்துகிறார்கள். இத்துறையில் எண்ணற்ற புத்தகங்கள் வரத் தலைப்பட்டிருக்கின்றன. இதற்காகப் பல சங்கங்களையும் பல இயக்கங்களையும் அமெரிக்காவில் கண்டேன். இந்தக் கருத்துக்களைச் சார்ந்த ஓர்

இயக்கத்தை, சமீபத்தில் ஷெர்லி மக்லேன் என்ற ஹாலிவுட் நடிகை துவக்கியிருக்கிறார்.

தனி மனிதன் தனது ஆற்றல்களை எப்படி வளர்த்துக்கொள்ள முடியும் என்று நீங்கள் கேட்கலாம். "சொந்தத் திறமைகளைப் புரிந்துகொள்ளும் விழிப் புணர்வு; மாறுதலை வரவேற்கும் மனோபாவம்; சவால் களைச் சமாளிக்கும் மனத்திட்பம்: மனித உறவுகளை வளர்த்துக்கொள்ளும் கலை; துணிவு; சுய கட்டுப்பாடு; சுய சோதனை செய்துகொள்ளும் மனப்பக்குவம்; லட்சியப்பற்று; சளைக்காத மனம்; பிறர் உணர்வுகளை மதிக்கும் பண்பு; தன்னுடைய பொருளாதாரத்தையும் நாட்டுப் பொருளாதாரத்தையும் பற்றிய அறிவு; உடலைப் பேணும் பயிற்சிகள்; உழைப்பை மதிக்கும் உள்ளப்பாங்கு; வாழ்வைப் பற்றிய ஒரு தத்துவநோக்கு; எதையும் வியூகத்துடன் எடுத்துச் செயல்படுத்தும் பழக்கம்; ஆக்கபூர்வமான கற்பனை உள்ளம்; ஆழ்மனக் கணிப்பு; ஐக்கியமாகும் தியான நிலை என்று பல வழி களில் மனிதர்கள் தங்கள் ஆற்றல்களை வளர்த்துக் கொள்கிறார்கள். பயப்படத் தேவையில்லை! இது யாரும் கற்றுக்கொள்ளக்கூடிய ஒன்று.

இதை உணரும் நாம் கிராமத்துக்குக் கிராமம், நகரத்துக்கு நகரம் சுயவளர்ச்சிக் கழகங்களை நிறுவ வேண்டும்; மனிதத் திறமைகளை வளர்க்கவேண்டும்.

நாட்டில் இன்று நிலவும் அவலமான நிலைகளுக்கும் அவநம்பிக்கைகளுக்கும் மாற்று — தைரியத்தையும் தன்னம்பிக்கையையும் வளர்க்கும் சுய வளர்ச்சிக் கழகங் கள்தான்; பரஸ்பர சந்திப்புக் கூட்டங்கள்தான்; கிராமங் கள் தோறும்.

நீங்கள் தயாரா?




# கதவு திறந்துதான் இருக்கிறது!

**ஹோ**ட்டல் சோழாவில் ஒரு சிறு கூட்டம். படித்தவர்கள் — நல்ல வேலையிலுள்ளவர்கள் — நடுத்தர வயதினர். ஒருசிலர் பெண்கள். ஒரு 'கிளப்'பின் சார்பில் பேச அழைத்திருக்கிறார்கள். விஷயங்களை எடுத்து அலசி, கருத்துக்களை ஆணித்தரமாகப் பதிய வைத்து விட்ட மகிழ்வுடன் அமர்கிறேன்.

நன்றி கூற வருகிறார் நம் நாயகர். நடுத்தர வயதுக்காரரர். இவர்தான் கடைசிப் பேச்சாளர். "நமது விருந்தினர்கள் நமது ஆற்றல்களைப் பற்றியும், நாம் செய்யவேண்டியது பற்றியும்கன்னத்தில் அறைவதுபோல் பேசினார்கள். இந்தச் சமுதாயத்தை மாற்றிவிடலாம் என்று நம்பிக்கை தெரிவித்தார்கள். அவர்களுக்கு நான்

கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்த நாடு மாறாது; இந்த நாடு ஒருநாளும் மாறாது. லஞ்சத்திலும் ஊழலிலும் அதிகாரத்திலும் ஊறிவிட்ட இந்தச் சமுதாயத்தை யார் வந்தாலும் மாற்ற முடியாது என்பதை நம் விருந்தினர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்!" என்று பேசினார். பேச்சுக் கிடையே மேஜையை ஒரு குத்துவிட்டார்.

என் மறுப்பைத் தெரிவிக்க எனக்கு வாய்ப்பில்லை. நான் திடுக்கிட்டு நின்றேன்.

நாட்டின் அவலநிலைகளைப் பற்றி எண்ணும் இவர்கள், பயத்தாலும் நம்பிக்கை இன்மையாலும் முடங்கிப் போயிருக்கிறார்கள். இவர்களும் ஒருவகை முடவர்களே; மன முடவர்கள்.

இத்தகைய மனிதர்களை அதிகார வர்க்கத்தில் காண்கிறேன். தொழிலதிபர்களிடையே காண்கிறேன். கிராமத்தில் காண்கிறேன்.

மத்தியதர வகுப்பினரிடமும் எவ்வளவு அவநம்பிகை, இயலாமை, விரக்தி மனப்பான்மை பரவி ஊறிப்போயிருக்கிறது என்பதை அவர் பேச்சு எனக்கு அன்று எடுத்துக்காட்டியது.

அருகிலிருந்தவர் சொன்னார்: "இது சுகவாசிகளின் கூட்டம். பொழுதுபோக்குக்காகப் பொதுநலப் பணி செய்பவர்கள் இவர்கள். தியாகங்களை மேற்கொண்டு சமுதாயத்தை இவர்கள் மாற்றி அமைத்ததாகச் சரித்திரம் இல்லை!" என்றார்.

"இயலாமையைப் பரப்புவதற்கொரு சங்கம், அதற்கொரு தலைவர், செயலாளர்" என்ற வேதனையுடன் வெளியே வந்தேன்.

இவர்கள் இயலாமையையும், விரக்தியையும் பரப்பிக் கொண்டிருக்கிறார்கள். அத்துடன் சாதாரணமாக இருந்த மற்றும் சிலரையும் "ஒன்றும் செய்ய இயலாத நிலையில் இருக்கிறோம்" என்று விரக்திப்பட வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

துக்கம் ஒரு மனநிலை. விரக்தியும் அப்படியே. நாட்டு நிலையைப்பற்றிக் கவலைப்படலாம். அருவருப்புடன் பேசலாம். அத்துடன் நின்றுவிட்டால் அருவருப்பு மட்டுமே மிஞ்சும்.

காரை ரிப்பேர் செய்துகொண்டிருக்கிறார் டிரைவர். முதலாளி கூப்பிட்டு அனுப்புகிறார். "அது உன்னால் முடியாத காரியம். காரை ஓர்க் ஷாப்புக்கு எடுத்துச் செல்!" என்று உத்தரவிடுகிறார். "முடியாதென்று தெரியாமல் போய்விட்டது ஐயா! காரைரிப்பேர் செய்து விட்டேன். இப்போது நன்றாக ஓடுகிறது ஐயா!" என்கிறார் டிரைவர்.

"முடியாதென்று தெரியாமல் போய்விட்டது ஐயா!" என்ற வாசகத்தை எண்ணிப் பாருங்கள். 'முடியாது' என்று தெரியாமல் போய்விட்டவர்கள்தான் துணிந்து 'முட்டாள்தனத்'துடன் முயன்று வெற்றி பெற்றிருக் கிறார்கள்.

அவன் சிறைக் கைதி. முப்பது ஆண்டுகளாகக் கதவு மூடியிருக்கிறது. தான் சிறையிலிருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறான் அவன். முப்பதாவது ஆண்டு முடியும் சமயத்தில் அவன் வெளிக்கதவுப் பக்கம்போய் ஆட்டிப் பார்க்கிறான், கதவு திறந்தே இருக்கிறது! பாவி மனிதன்! கதவு திறந்தே இருக்கிறது என்பது தெரியாமலே வாழ் நாள் பூராவையும் கைதியாக ஓட்டிவிட்டான்!

நண்பர்களே! கதவு திறந்துதானிருக்கிறது. நீங்கள் தான் மூடி இருக்கிறதென்று எண்ணிக் கொண்டிருக் கிறீர்கள்! நீங்கள்தான் அவலத்தைப் புலம்பிக்கொண்டு செயலேதும் செய்யாமலிருக்கிறீர்கள்.

எனது அமெரிக்க நண்பர் ஒருவர் ஒரு சமயம் கூறினார் : "எனக்குக் கோபமும் ஆத்திரமும் வெறுப்பும் வரும்போது, என் பின்புறத் தோட்டத்தில் புல்வெட்டப் போவேன். ஒரு அரை மணி நேரம் கடும் உழைப்பு. வியர்வை. என் மனம் வேறு ஒன்றில் பூரணமாக ஈடு பட, நான் என் கோபத்தை அறவே மறந்துவிடுகிறேன்."

செயல் மூலம் நம் எண்ணங்களை மாற்ற முடியும் என்பதுதான் இந்த நிகழ்ச்சிகள் காட்டும் மனோதத்துவம்.

கிழக்கத்திய மனோபாவத்தை ஆராய்ந்த நக்கமுரா என்ற ஜப்பானிய அறிஞர், "சைனாக்காரர்கள் செயல் படும் இனம் என்றும், இந்தியர்கள் அதிகம் சிந்திக்கும் (அதிகம் செயல்படாத) இனம்" என்றும் எழுதுகிறார். நாம் யோசித்துப் பார்க்கவேண்டும். அவல நிலைகளைப் பற்றி வெறும் பேச்சு பேசிக்கொண்டிருந்தால் நாம் எந்த ஊருக்குப் போவோம்? நமது மனநிலையை அல்லவா மேலும் பாழ்படுத்துகிறோம்?

நம்மையும் மீறி நாம் செய்யும் செயல் மூலம்தான் இன்றைய நாட்டு நிலையினை மாற்றலாம்,

கிராமத்துக் குளத்தில் தூர்எடுத்தபோது நாற்பது பேர் பஞ்சாயத்துப் போர்டிலிருந்து கூலி பெற்று உழைத் தார்கள். மறுநாள் பஞ்சாயத்துப் போர்டிலிருந்து கூலி பெறுவது நிச்சயமில்லாமல் போகவே, அவர்கள்— நாற்பது பேர்—வேலைக்கு வரவில்லை. எங்களுக்கு மூன்றில் ஒருபங்கு உழைப்ப நஷ்டம்.

மறு வாரம் கிராமத்துக்குச் சென்றபோது, அந்தக் குளம் இன்னும் அதிகமாக வெட்டப்பட்டிருப்பதைக் கண்டு அதிசயித்தேன். பஞ்சாயத்துத் தலைவரும், குளத்தைச் சுற்றிக் குடியிருக்கும் மக்களும் கூடிப்பேசி யிருக்கிறார்கள்.

"இது நமது குளம். வெளியூர் மாணவர்களும் பேராசிரியர்களும் வந்து நமக்காகப் பாடுபடும்போது நாம் சும்மா இருந்தால் எப்படி?" என்று கேட்டிருக் கிறார்கள். இதன் விளைவாக, எந்தக் காசு பணத்தை யும் எதிர்பாராமல் குளத்தை அவர்களே வெட்ட முன் வந்திருக்கிறார்கள்.

மனித மனங்கள் செயல்படும் விதத்தை விளக்க இதைவிட ஒரு சிறந்த உதாரணம் இருக்க முடியாது. நல்லெண்ணத்தோடு செய்யப்படும் செயல் ஒரு தொடர்ந்த அலைகளை ஏற்படுத்துகிறது. ஒரு சிறு கிராமத்தில் ஒரு சிறு செயல் ஏற்படுத்தும் அலையினை எண்ணிப்பாருங்கள்.

நாட்டுக்கு இன்று செயல் தேவை. செயல் மட்டுமே நமது அவலநிலைகளை மாற்ற உதவும். செயலின் அடிப்படை எண்ணம்தான். நம்மால் முடியும் என்ற எண்ணம். நம்மால் இந்தச் சமுதாயத்தை மாற்றமுடியும் என்ற எண்ணம். மாற்ற வேண்டும் என்ற ஆர்வம். நாடு பூராவும் இது பரவும்போது நாடு மாறும் நாளை. நல்லெண்ணங்கள் பரப்புவோம் இன்று.

புரட்சி என்பது மனமாற்றம்தான்.




## நம் வரியில் இவர்கள் 'பிழைப்பு' நடத்துகிறார்கள்?

உலகிலேயே ஊர்த் தலைமை, நகராட்சித் தலைமை, நாட்டுத் தலைமை என்பது மிகப் புனிதமான ஒரு பொறுப்பு. மனித மனங்களின் கூட்டு நம்பிக்கை தான் ஒரு மனிதனைத் தலைவனாக்கி, அவனைப் பதவி யில் வைக்கிறது. அவன் பொறுப்புகள் ஒரு தெய்வீகத் தன்மை பெறுகின்றன. அவன் ஊருக்கு உழைக்கிறவன், தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் பெருமனித வாழ்வை மேற்கொள்கிறவன் என்பதால்!

இவர்களை அதிகாரிகள் என்கிறோம், அமைச்சர் கள் என்கிறோம், மாநில முதல்வர் என்கிறோம், பிரதமர்

என்கிறோம். இவர்கள் உண்மையிலேயே தொண்டர் கள். மக்கள் தொண்டர்கள். மக்களது வரிப் பணத்திலே இவர்களுக்குப் படி அளக்கப்படுகிறது. மக்களது வரிப் பணத்திலே இவர்கள் வாழ்க்கை நடக்கிறது. மக்களது வரிப் பணத்திலே இவர்களது கார்களுக்கு பெட்ரோல் வாங்கப்படுகிறது.

இவர்கள் எல்லோரும் நாம் கொடுக்கும் வரியில் குடும்பம் நடத்துபவர்கள். நமது வரியில் சம்பளம் பெறுபவர்கள். 'ஊர் நன்மை' என்ற பொதுப் பணியை மனமுவந்து ஏற்றுக்கொண்டு உழைக்க முன்வந்தவர்கள். இந்த மகத்தான உண்மையை, மக்களும் அமைச்சர் களும் அதிகாரிகளும் மறந்து போய்விட்டார்களோ என்கிற கதியில் நாடு இன்று செல்கிறது.

ஒரு சமயம், ஓர் அரசியல் தலைவரும் சில அதிகாரி களும் அமெரிக்கா வந்தார்கள். பெரிய பெரிய விவசாயப் பண்ணைகளையும், உணவு தயாரிக்கும் நிறுவனங்களை யும் பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும் ஊற்றுப்படுகை களையும் காட்டிய பின், அங்கே சாலை போட்டுக் கொண்டிருந்த இடத்துக்கு அவர்களை அழைத்துப் போனேன்.

தார் ரோடு போட்டுக் கொண்டிருந்தார்கள்—சில தொழிலாளர்கள். யந்திரங்களும் அங்கே வேலை செய்து கொண்டிருந்தன.

"இப்படித்தான் நம் ஊரிலும் செய்கிறோம். இதில் என்ன புதுமை?" என்று கேட்டவர்களை, "கொஞ்சம் மேலே பாருங்கள்!" என்றேன். அங்கே ஒரு பெரிய பலகையில்—'உங்கள் வரி இங்கே வேலை செய்து கொண்டிருக்கிறது. (Your Taxes At work) என்று ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தது.

“பாருங்கள்! அரசாங்கம் பொது மக்களுக்காக இயங்குகிறது என்பதை எவ்வளவு அழகாகச் சொல்கிறார்கள். ‘உங்கள் வரியைக் கொண்டுதான் சாலை போடுகிறோம்’ என்று எழுதியிருப்பதன் மூலம், ‘உங்கள் வரியைப் பத்திரமாக உபயோகிக்கிறோம்’ என்று சொல்கிறார்கள். இது உங்கள் சொத்து. இதைப் பத்திரமாகப் பாதுகாத்துக்கொள்ளுங்கள் என்று சொல்கிறார்கள். உங்கள் வரியில்தான் எல்லாம் இயங்குகிறது என்று மக்களைப் பெருமைப்படுத்துகிறார்கள்.

இத்துடன் நமது ஊர் நடைமுறையையும் ஒப்பிட்டுப் பாருங்கள். “நமது ஊரிலும் நமது வரியில்தானே அரசாங்கம் நடக்கிறது? ஆட்சி செய்வோர் அளிக்கும் மான்யத்திலா அரசாங்கம் நடக்கிறது அல்லது அந்நிய நாட்டு மான்யத்திலா அரசாங்கம் நடைபெறுகிறது?”

நான் இப்படி விளக்கியதும் வந்திருந்த அரசியல் தலைவர் ஒரு கணம் பேச்சிழந்து போனார். கூட வந்த அதிகாரிகள், தலைகளைத் தொங்கப் போட்டுக்கொண்டார்கள். சுயசோதனை செய்துகொண்டிருக்கிறார்கள் போலும், பேசவில்லை.

கிராமத்தில் கேள்விப்பட்டேன். முறையீடு செய்யச் சென்ற விவசாயப் பெருங்குடி மக்களை, மணிக்கணக்கில் தாமதம் செய்து, பிறகு ஒரு நிமிடம் சந்திக்கிற கலெக்டர்களைப் பற்றிக் கேள்விப்பட்டேன். “பணமும், அரிசியும், கோதுமையும் அரசாங்கத்தால் அனுமதிக்கப் பட்டிருக்கிறது. அதற்கு உடனடியாக ஏற்பாடு செய்கிறேன்!” என்று சொல்லிவிட்டுப் போன அதிகாரிகள் ‘ஒரே வழியாகப் போனவர்கள்தான்’ என்ற நிலையைக் கண்டு மனம் வெந்தேன். தனியார் ஒருவரிடம் கையூட்டு வாங்கிக்கொண்டு, மக்கள் சேர்ந்து

நடத்தும் ஒரு கூட்டுறவுத் தொழிற்சாலைக்கு எதிராகத் திட்டமிடும் 'மேல்மட்டத்து மக்களை'க் கண்டு மனம் பதைத்தேன்.

இது என்ன அராஜகம்?

ஏன் இப்படி?

அரசன் எவ்வழி அவ்வழி குடிகளா?

ஆட்சி நம் கையிலிருக்கும்வரை நம்மை யாரும் அசைக்க முடியாது என்ற ஆணவ மனோபாவமா?

உப்பு, மிளகாய், புளி, துணிமணி, சிமெண்ட், புகையிலை, சினிமா என்று நம் பணத்தில் நாம் கொடுக்கின்ற வரியிலிருந்து நடத்தப்படும் அரசாங்கமா இது?

முதல் காரியமாக நாம் தாலுகா ஆபீஸ்களிலும் கலெக்டர் ஆபீஸ்களிலும், அமைச்சர்களின் அலுவலகங்களிலும் இருக்கும் நமது தலைவர்களின் படங்களை அகற்றிவிட்டு, "உங்கள் வரி இங்கே வேலை செய்து கொண்டிருக்கிறது" என்ற நல்ல வாசகங்களை மாட்டி வைத்தாக வேண்டும்.

விழிப்புணர்வுதான் செயலுக்கு முதல் படி.

நம் வரியில் அரசாங்கம் செயல்படுகிறது என்ற விழிப்புணர்வை முதலில் நாம் பெறுவோம். பின், நினைவூட்டுவோம், நெருக்குவோம். இன்று நாட்டில் ஒரு புதுத் திருப்பம் தேவை.

நினைவு கொள்ளுங்கள். நாம் இந்த நாட்டில் ஒரு ஜனநாயகத்தை அமைத்திருக்கிறோம். அதிகார நாயகத்தை அல்ல; ஊழல் நாயகத்தை அல்ல. நம் வரி இங்கே வேலை செய்யவேண்டும். பொது மக்களுக்காக; நமக்காக.




## திருந்த வேண்டாமா? திருத்த வேண்டாமா?

தோட்டப் பக்கம் ஒரு 'செப்டிக் டாங்க்' கட்டிக் கொண்டிருந்தார்கள். ஏழடிக்கு ஐந்தடி பள்ளத்தைத் தோண்ட நான்கு ஆட்கள். நிற்பதற்குக்கூட நான்கு ஆட்களுக்கு அங்கு இடமில்லை. அதாவது, இரண்டு பேர் வேலையை நான்கு பேர் செய்கிற விஷயம். வந்த நேரமோ காலை ஒன்பது மணி. வேலையை விட்டு வெளியேறிய நேரமோ மாலை நாலரை மணி. இடையிலே டீ குடிக்கும் நேரம், சாப்பாட்டு நேரம், இளைப்பாறும் நேரம். மொத்தத்தில் ஆறு மணி நேரம் வேலை செய்தால் பெரிய காரியம்.

"இப்படித்தான் செய்றானுவ. என்ன செய்யச் சொல்றே. கொடுக்கிற காசுக்கு எங்கே வேலை

நடக்குது?'' என்று அங்கலாய்த்துக் கொண்டார் வீட்டின் சொந்தக்காரர்.

"அதுவும் நாம் கண்கொட்டாது பார்த்துக் கொண்டே வேலை வாங்கினால்தான். இல்லாவிட்டால் சும்மா குந்தியிருப்பார்கள். வெற்றிலை போடுவார்கள். கதை பேசுவார்கள்'' என்றார் அவர். வாங்குகிற சம்பளத்துக்கு வேலை செய்யும் பொறுப்பும் கடமை உணர்வும் எவ்வளவு கேவலமாகப் போய்விட்டது என்று சிந்தித்து கொண்டிருந்தேன்.

இது தஞ்சைக் கிராமத்தில்.

சென்னைக்கு அருகே உள்ள விவசாயப் பண்ணை யைப்பற்றி நான் கேட்ட செய்தி இன்னும் விசித்திரமாக இருந்தது.

"எனது பண்ணையில் ஒரு நாளைக்கு 12 ரூபாய் சம்பளம். கறாராக வேலை வாங்குவேன். எனக்கு வேலை நடந்தாக வேண்டும்.

எனது பக்கத்துப் பண்ணையை ஒரு கம்பெனி நடத்துகிறது. ஒரு நாளைக்கு ஒன்பது ரூபாய்தான் கூலி தருகிறார்கள். இருந்தாலும், அங்கே வேலை செய்யக் கூட்டம் சேருகிறது. ஏன் தெரியுமா?

அங்கே நுழைந்து பெயரைப் பதிவு செய்து கொண்டால் போதும், அவ்வளவுதான். அங்குமிங்கும் நின்றுவிட்டு, ஏனோதானோவென்று வேலை செய்து 'ஒப்பேத்தி'னால் போதும். உழைப்பவர்களின் மனோ பாவத்தைப் பாருங்கள். வேலைசெய்யாமல் நெளு வெடுத்தால் ஏதோ தன் சக்தியைச் சேமித்து வீட்டுக்கு எடுத்துப் போவதாக எண்ணிக்கொள்கிறார்கள்,

"குறைந்த சம்பளம் போதும்; நெளுவெடுக்கிறேன் என்று சொன்னால் என்ன அர்த்தம்? இந்த நாடு எங்கே போகும்?" என்று அவர் கேட்டபோது பிரச்னை ஏதோ ஆழத்தில் அடிமட்டத்தில் புரையோடியிருப்பது புரிந்தது.

சகஜமாகத் தொழிலதிபர்கள், "நமது தொழிலாளர் கள் யாருக்கும் சளைத்தவர்களல்ல, உண்மை உழைப் பாளிகள். எந்த நாட்டுத் தொழிலாளிக்கும் அறிவிலும் திறமையிலும் ஈடு கொடுக்கக்கூடியவர்கள்" என்ற பெருமையுடன் பேசுவதைக் கேட்டிருக்கிறேன்.

தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்களை ஒரு நெறிமுறைக்கு—ஒரு 'சிஸ்ட'த்துக்குப் பழக்க விடுகிறார் கள் சேர்ந்த உடனேயே. மேலும், அவர்கள் அங்கே ஓடுகின்ற இயந்திரங்களுக்கு ஈடுகொடுத்து வேலை செய்யவேண்டி இருக்கிறது. இதன் விளைவாக, சில ஆண்டுகளில் ஓர் உண்மையான வேலை செய்யும் மனோபாவத்தைப் பெறுகிறார்கள்; பழக்கத்துக்கு உட்படுத்தப்படுகிறார்கள். ஆகவே, அங்கு உற்பத்தி பெருகுவதில் ஆச்சரியமில்லை.

கிராமத்திலும், தொழிற்சாலை 'கெடுபிடி' இல்லாத இடங்களிலும் வாழ்கின்ற மக்கள், பொதுவாக நேரத்துக்கு மதிப்புக் கொடுப்பதில்லை. இவர்கள் உழைப் பில் ஒரு நிதானம் (அல்லது சோம்பேறித்தனம்) மேவி நிற்கிறது. வேலையில் ஒரு கறார் தன்மை காணப் படுவதில்லை. "எதுவும் சரி. எல்லாம் சரி!" என்கிற ஒரு மனோபாவம் நமது இயல்பில் கலந்திருக்கிறதா என்பதை நமது சமுதாய இயல் அறிஞர்கள் ஆராய்ந்து கூற வேண்டும்.

அமெரிக்காவில் அரசாங்க வேலை எட்டு மணி நேரம். நமது ஊரில் 6 மணி அல்லது 7 மணி நேரம். இதில் பத்துப் பேர் செய்யக்கூடிய வேலையைப் பதினைந்து பேர் செய்யும் நிலை வேறு.

மொத்த உழைப்பின் பலன்தான் பொருள் உற்பத்தி என்பதை நினைவில் கொண்டால், மொத்த நேரக் குறைவால் நமது உற்பத்தி குறைந்து போவதில் வியப் பென்ன? ஒரு நாளைக்கு ஆறுமணி நேரமும் ஏழுமணி நேரமும் வேலை செய்யும் அலுவலகங்கள், மீதி நேர உழைப்பைச் சேமித்தா வைக்கின்றன? அது பொதுச் சொத்தின் நஷ்டமல்லவா?

நமது காலை நேரங்களை நமது நாட்டில் நாம் பயன்படுத்தும் விதம், தீவிர—அவசர சிந்தனைக்கு உரியது. இந்தக் காலை நேரம்தான் ஆக்க சக்தி மிகுந்த நேரம் என்பது உலகெங்கும் ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்மை. பிற நாடுகளில் பனிக்காலங்களில், காலை இருள் அகலாத நிலையில்—காலை எட்டு மணிக்கு அலுவலகம் துவங்கும். பல நிர்வாகிகள் காலை எட்டு மணிக்குப் போவதற்குப் பதிலாக, காலை ஏழரை மணிக்கே அலுவலகத்துக்குப் போய் விடுவார்கள். க்ாரணம், அந்தக் காலை நேரத்தில் யாருடைய தொந் தரவும் இல்லாமல், 'போன் கால்'கள், 'விசிட்டர்கள்' என்றில்லால் அன்றைக்குச் செய்ய வேண்டிய காரியங் களைத் திட்டமிடச் செலவழிக்கிறார்கள். 'எனக்கு இன்று அரை மணி நேரம் அதிகம் கிடைத்தது' என்று சந்தோஷப்படுகிறார்கள்.

அங்கே அலுவலகத்துக்கு நிர்வாகிகள்—பெரியவர் கள்—முன்னதாக வருகிறார்கள். நமது ஊரில் அலுவலக நிர்வாகிகள்—பெரியவர்கள்—காலந்தாழ்த்தி வருவதைப்

பார்க்கிறேன்; எல்லோரும் வந்த பின்னால் வருவதைக் காண்கிறோம்.

தெளிவாகச் சிந்திக்கவும், செயல்படவும் உபயோகப் படக்கூடிய ஆக்க சக்திமிக்க நேரத்தை—கறிகாய்க் கூடைக்காரருடன் பேரம் பண்ணிக்கொண்டிருப்பதில் செலவழித்தால் எப்படி?

முன்னறிவிப்பு இல்லாமல் இரண்டு மூன்று நாள் என லீவு எடுத்துக்கொள்ளும் ஒரு தன்மையை இங்கே காணலாம்; அங்கே காண முடிவதில்லை. உழைப்பாளர் களிடையே அங்கே உழைப்பும் கட்டுப்பாடும் அதிகம். "இன்றைக்கு ஆபீஸுக்கு மட்டம் போட்டுவிட்டு நாளைக்குப் போய் சொல்லிக்கொள்ளலாம்!" என்கிற மனப்பான்மை, "பரவாயில்லை" என்கிற மனோபாவம் நமது நாட்டில் ஒரு தேசிய மன நோயாக நிலவுகிறது என்று எழுதுகிறார் ஓர் இந்திய விமரிசகர்.

ஆங்கிலத்தில் (Paper Pushing) 'தாள்களை நகர்த்தி கொண்டிருக்கும் உத்தியோகம்' என்ற ஒரு சொற் பிரயோகம் உண்டு. தாள்களைக் கோப்புகளாக்கி, கோப்புகளில் ஒவ்வொருவரும் ஒரு குறிப்பெழுதி, கையெழுத்து நாட்டி முடிவில் மகாராஜாதி ராஜாவுக்குப் போகும் ஒரு நெறிமுறை அதிகமாக அரசாங்க அலுவல கங்களில் தென்படுகிறது. ஒரு முறை 'அப்ளிகேஷன்' வேண்டும் என்று நான் கேட்டேன். 'அப்ளிகேஷன்' வேண்டும் என்று ஒரு அப்ளிகேஷன் எழுதிக் கொண்டு வாருங்கள். நாங்கள் அதைப் பதிந்து கொண்டு அப்ளிகேஷனைத் தபாலில் அனுப்புகிறோம்" என்ற போது நான் விக்கித்து நின்றேன்.

'பிரிட்டிஷ்காரர்கள் 'தாள்நகர்த்தும் உத்தியோக'த் தையும் ஜபர்தஸ்துக்களையும் சிருஷ்டித்தார்கள்,

இந்தியர்கள் அதற்கு ஒரு பூரணத்துவம் கொடுத்து அதைக் கலையாக்கினார்கள்!' என்று ஆங்கில வாசகம் உண்டு.

உழைப்பதற்காக ஒருவருக்குக் கூலி கொடுக்க வேண்டுமா அல்லது உழைப்பதற்கு சால்ஜாப்பு சொல்வதற்காகச் சம்பளம் கொடுப்பதா?

உழைப்பும், உழைக்கும் மனோபாவமும் நாட்டின் சொத்துக்கள்.

திருந்த வேண்டாமா? திருத்த வேண்டாமா? இன்றில்லாவிட்டால் என்று?




## செலவுச் சுமையைக் குறைப்பார்களா?

அரசாங்கச் செலவை அதிகரித்துக்கொண்டே போவது புத்திசாலித்தனமல்ல. 'குறைவான அரசாங்கம்' (Less Government) என்கிற சுலோகத்தை வைத்துத்தான் அமெரிக்க ஜனாதிபதி ரீகன் பதவிக்கு வந்தார். ''அரசாங்கச் செலவு அதிகரிக்கும்போது அநாவசிய செலவுகள் அதிகமாகின்றன. தனி மனித வாழ்விலும் சுதந்திரத்திலும் அரசாங்கத் தலையீடு அதிகமாகிறது'' என்பது அவர் கொள்கை. ''அரசாங்கப் பணம் பலன் தரும் வகையில் செலவிடப்படுவதில்லை. சரியானதொரு கண்காணிப்பு இல்லை'' என்பது அவரது வாதம்.

அரசாங்கம் என்பது ஒரு தேவையான இடைஞ்சல்! அதை எவ்வளவு அதிகமாக்குகிறோமோ அவ்வளவுக்குக்

கஷ்டம்தான் பெருகும். ஆகவே, இடைஞ்சலை ஓர் எல்லைக் கோட்டுக்குள் வைத்துக்கொள்வது நல்லது.

"நான் அரசாங்கத்தில் வேலை செய்கிறேன்!" என்பதைப் பெருமையாக அமெரிக்கப் பொதுமக்கள் கருதுவதில்லை. 'நல்ல திறமையுள்ளவன் என்றால், தனியார் நிறுவனத்தில் பெரிய சம்பளத்தில் போயிருப்பான். ஆகவே, அரசாங்க வேலைக்குச் செல்பவன் வேறிடங்களில் விலைபோகாதவன்' என்றே நினைப்பார்கள். மேலும், நமது வரியில் இவர் சம்பளம் வாங்குகிறார் என்ற உணர்வைப் பொதுமக்கள் நினைவில் வைத்துக்கொள்கிறார்கள்.

அமெரிக்காவிலுள்ள லூசியானா மாநிலத்தில் பெட்ரோலிய எண்ணெய், விலைச்சரிவின் காரணமாக மாநில வருமானம் மிகவும் குறைந்து போய்விட்டது. அரசாங்க அலுவலர்களுக்கு அரசாங்கம் நடத்தும் பள்ளி ஆசிரியர்களுக்கு—சம்பளம் கொடுக்கப் பணமில்லை. கிட்டத்தட்ட இருபது சதவிகித அலுவலர்களையும் ஆசிரியர்களையும் அரசாங்கம் வீட்டுக்கு அனுப்பியது. அரசு செய்யும் செலவுகளைப் பலவகைகளில் குறைத்துக் கொண்டது. நம் நாட்டில் செய்வார்களா...? செய்ய முடியுமா...?

ஒரு நிறுவனம் நஷ்டத்தில் ஓடும்போது அதிலுள்ள தொழிலாளர்கள் குறைக்கப்படுகிறார்கள். ஓர் அரசாங்கத்தில் வருமானமில்லாதபோது, ஓர் அரசாங்கம் நஷ்டத்தில் ஓடிக்கொண்டிருக்கும்போது அநாவசியமாகச் செயல்படும் அலுவலர்களை நீக்க வேண்டாமா...? பாங்குகள் செலவைக் கட்டுப்படுத்தும் வழிமுறைகளை நஷ்டத்தில் ஓடும் கம்பெனிகளுக்குச் சொல்லிக்கொடுக்கின்றன. நமது ஊரில் அரசாங்கத்துக்கு வரவுக்குள்

செலவை நடத்தும் வழிமுறைகளை உணர்த்துவார் இல்லை.

'ஓர் அரசாங்கத்தைச் செயல்படுத்த இவ்வளவு பெரிய அரசாங்க யந்திரமும் செலவுச் சுமையும் நியாயம் தானா இந்த ஏழை நாட்டில்' என்பதை ஆட்சியிலிருப் போர் யோசித்துப் பார்க்கவேண்டும்.

ஆண்டுதோறும் ஒவ்வொரு பிரிவும் (Department) அடுத்த ஆண்டுக்குத்தேவையான பட்ஜெட்டைச் சமர்ப் பிக்கின்றன. சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு இவ் வளவு அதிகத் தேவை என்று காரணம் காட்டித் தங்கள் பிரிவை விரிவுபடுத்துகின்றன. இப்படி செலவுச் சுமை அதிகமாவதை தடுக்க சீரோ பேஸ்டு பட்ஜெட்டிங் (Zero Based Budgeting) என்ற ஒரு முறையைப் பிற நாடுகளில் அரசாங்கமும், கம்பெனிகளும் கடைப்பிடிக் கின்றன.

சென்ற ஆண்டு செலவின் விவரங்களை வைத்து இந்த ஆண்டுச் செலவுக்கு அனுமதி வழங்குவதற்குப் பதிலாக, விஷயத்தின் ஆரம்பத்துக்கே போகிறார்கள். 'இந்தப் பிரிவு தேவைதானா? இதனால் நாட்டுக்கு— கம்பெனிக்கு என்ன பயன்? இதைப் பூராவுமாக எடுத்து விட்டால், குடி முழுகிவிடுமா, என்ன?' என்று சிந்திக்கும் மறுபரிசீலனையைத்தான் 'சீரோ பேஸ்டு பட்ஜெட்டிங்' என்று ஆங்கிலத்தில் கூறுகிறார்கள்.

அரசாங்க டிபார்ட்மெண்டுகளை அதிகமாக்கி பட்ஜெட்டுகளை அதிகமாக்கும் நம் நாட்டு அமைச்சர் பெருமக்கள், இதைக் கருத்தில்கொண்டு உற்பத்தியாளர் களைப் பெருக்கத் திட்டங்களை வகுக்க வேண்டும்; அரசாங்கப் பிரிவுகளை அல்ல.

எண்ணிப் பாருங்கள். இப்படிச் செயல்பட்டால் நம் நாட்டில் எவ்வளவு பிரிவுகளுக்கு அமைச்சர்கள் மூடு விழா நடத்தலாம், எவ்வளவு பணம் மிச்சமாகும் என்பதை. குடந்தையில், பல்பொடி விநியோகம் சரிவர நடக்கிறதா என்பதைப் பார்ப்பதற்காக ஒரு தனி அதிகாரி, அவருக்கொரு தனி ஜீப், அன்றாடப் படி என்று கேள்விப்பட்டேன். இனி பக்கெட் ஓட்டையை ரிப்பேர் செய்யும் அதிகாரி, பொங்கல், தீபாவளி இனாம் மேற்பார்வை அதிகாரி, அதற்கொரு வாரியம் என்றெல்லாம் போனால் ஆச்சரியப்பட ஏதும் இல்லை.

'வோட்டு வாங்குவதற்காகச் செலவுகள் செய்யப்படுகின்றனவே தவிர, உற்பத்தியைப் பெருக்க அல்ல!' என்று அதிகாரிகளும் அமைச்சர்களும் உணர்கிறார்கள். பேசத் தான்—வாய்திறந்து பேசத்தான் முடியவில்லை. நாடு ஒரு மாற்றத்தை—ஒரு நியாயத்தை எதிர்நோக்கி நிற்கிறது.




## திடீர் பணக்காரர்கள்

**உ**ழைத்து முன்னேற வேண்டுமென்று விரும்பும் மனிதர்களை ஜப்பான் போன்ற பிற நாடுகளில் காண் கிறோம். சுலபமாகப் பணக்காரனாகிவிட வேண்டு மென்று எண்ணுபவர்களை நம் நாட்டில் ஏன் அதிகம் காண்கிறோம்?

சோம்பேறிகளுடைய மனமும், அதிபுத்திசாலி களுடைய மனமும் இப்படித்தான் வக்கிரப்பாதையில் சிந்திக்கும் என்று சொல்வார்கள். நமது நாட்டில் அதிபுத்திசாலிகளும் சோம்பேறிகளும் அதிகமாகி விட்டார்களா?

திடீர்ப் பணக்காரனாகிவிடும் வாய்ப்பு நம் நாட்டில் இரண்டு துறைகளில் நிலவுகிறது.

ஒன்று, சினிமா; இரண்டாவது, அரசியல்.

சினிமா பிடித்து, சினிமாவில் நடித்துச் சீக்கிரம் பணக்காரனாகிவிடலாம் என்ற பரவலான எண்ணம் மக்களிடையே நிலவுகிறது. இருபது சினிமாக்கள் வெளி வந்தால் ஒரு சினிமாதான் வெற்றியடைகிறது. போட்ட முதலையும் லாபத்தையும் பெறுகிறது என்று சமீபத்தில் கணக்கிட்டிருக்கிறார்கள். அதாவது, வெற்றியடையும் வாய்ப்பு ஐந்து சதம்தான். மற்றோர் ஐந்து சதம், போட்ட முதலினை மட்டுமே பெறுகிறார்கள். மற்ற 90 சதம் பேரும் போட்ட சட்டையை இழந்து, காரை இழந்து, வீட்டை இழந்து தலையில் துண்டு போட்டுக் கொண்டு போகிறார்கள் என்று சொன்னார்கள்.

உண்மை இப்படியிருக்க, சினிமாமூலம் திடீர்ப் பணக்காரனாகலாம் என்று உங்களை யாராவது நம்ப வைத்தால், அவர்கள் உங்கள் பாக்கெட்டில் கை வைக்க வருகிறார்கள் என்றுதான் அர்த்தம்.

இரண்டாவதாக, அரசியல்மூலம் திடீர்ப் பணக்கார னாகிவிடும் நிலை இன்று நாட்டில் நிலவுகிறது. இவர்கள் சொத்து சேர்க்கும் விதம் நாடறிந்த விஷயம். சில மாதங்களுக்குமுன் மத்திய அரசு, பெரிய தொழிற்சாலை அதிபர்கள் வீட்டில் ரெய்டு நடத்தியது. பொதுமக்களது வரியைக் கொள்ளையடித்து வாழும் அரசியல்வாதிகள் வீட்டில் ஏன் மத்திய அரசு 'ரெய்டு' நடத்தவில்லை...? அது அவர்கள் இனம் என்பதாலா?

திடீர்ப் பணக்காரனாகிவிடும் ஆசைதான் நேர்மை யான உழைப்பின்மீது மக்கள் நம்பிக்கை வைக்கா ததற்குக் காரணமோ?

எங்கள் கிராமத்தில் முன்பெல்லாம் கேட்டால் 'இவர் இன்ன தொழில் செய்கிறார்' என்று அறிமுகப்படுத்து

வார்கள். இப்போது என்னவென்றால் 'இவன் இன்ன கட்சியில் இருக்கிறான்' என்று சொல்கிறார்கள். காரணம், இந்தக் கட்சிக்காரரர்கள் பலவிதங்களில் ஊர்ப் பணத்தைக் கொள்ளையடித்து, திடீர்ப் பணக்காரரர் களாகி இருக்கிறார்கள்.

இந்தத் திடீர்ப்பணம் நிலைக்குமா?'இப்படியெல்லாம் ஊழல் நடந்திருக்கிறது முந்தைய அரசில்' என்று பட்டியல் போட்டுக் காட்டித்தானே இன்றைய அரசியல் தலைவர்கள் ஆட்சிக்கு வந்தார்கள்?

அரசியலில் இப்படித் திடீர்ப் பணம் செய்வோர் சிறைக்குச் செல்லும்போதுதான் மக்களுக்கு உண்மை யான உழைப்பின்மீது நம்பிக்கை வரும்.

இன்று தமிழ்நாடு பூராவும் லாட்டரிச் சீட்டு விற்பனை நடைபெறுகிறது. இதை யார் செய்கிறார்கள்? மாநில அரசே செய்கிறது. ஓர் அரசாங்கம், மக்களைப் பார்த்து, "உங்கள் அதிர்ஷ்டத்தை நம்புங்கள். உழைத்து உழைத்து ஓடானது போதும்!" என்று கூறுமானால், அந்த நாட்டு மக்கள் லாட்டரிச் சீட்டு வாங்கிக் குபேர னாகிவிடலாம் என்றுதானே எண்ணுவார்கள்?

'இந்த உலகிலே யாரும் எதையும் இனாமாகப் பெறுவதில்லை. எதற்கும் ஒரு விலை இருக்கிறது; உழைப்பு இருக்கிறது' என்பதை நம்பி முன்னேறிய நாடு கள் செயல்படும்போது நமது லாட்டரி மனோபாவம் நமது நாட்டை எங்கே அழைத்துச் செல்லும்?

இதை ஓர் அரசாங்கம் அனுமதிக்கிறது, ஆதரிக் கிறது, ஊக்கமூட்டுகிறது என்றால்...இது என்ன கொடுமை?

பொதுமக்களை ஏமாற்றும் சூதாட்டத்தை அரசாங்கமா செய்வது...? குதிரைப் பந்தயத்தை ஒழித்து விட்டு, லாட்டரிப் பந்தயத்தில் பணம் பண்ணுவதா...? அரசாங்கத்துக்கு ஏதேனும் விவஸ்தை இருக்கிறதா?

எல்லோரும் லாட்டரிச் சீட்டு வாங்கி, குலுக்கல் நாளை எதிர்பார்த்து, பரிசு விழும்வரை கடன் வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டிருந்தால் நாடு என்னாகும்?

தம்பி! நல்லவனான நீ ஒரு நாள் வல்லவனாக வருவாய். இதெல்லாம் மாறவேண்டும்; மாற்றப்பட வேண்டும்.

பொருளை யாரும் மந்திரத்தால்—லாட்டரிச் சீட்டு மூலம்—பெற்றதாகச் சரித்திரம் இல்லை. உழைப்பின் பலன்தான் பொருள், வீடு, வாசல், தோட்டம் எல்லாம். உழைக்கும் கரங்கள்தான் வலிமை பெறுகின்றன. உழைப்பதில்தான் தன்மானம் இருக்கிறது; இனாமாகப் பெறுவதில் அவமானம் தொனிக்கிறது.

தமிழன் உழைப்பதற்குச் சோம்பல் படுபவன்—தன்மானமற்றவன் என்ற இழிசொல் உன்னைத் தொட வேண்டாம். உழை; பெருமையுடன் நட.




## கொள்கைச் சித்தர்
## சபலச் சித்தரான கதை...!

ஒரு சாதாரண மனிதன் தலைவனாக மாறும் போது எந்தத் தாகங்கள் அவனிடம் ஏற்படுகின்றன; அவன் எந்தப் படிகளைக் கடக்கிறான் என்று நான் யோசிப்பதுண்டு. மனவியல் அறிஞர் மாஸ்லோ கூறும் மனிதத் தேவைகள், ஒரு தனி மனிதனுக்குப் பொருந்தும். ஆனால், ஒரு சாதாரண மனிதன், தலைவன் என்கிற பாதையைத் தேர்ந்தெடுக்கும்போது அவனது தேவைகள் சற்றே வேறுபடுகின்றன.

என்ன அந்த மாறுபட்ட தேவைகள்...?

பணம், பதவி, புகழ்...!

இதற்காக அவன் ஏங்குகிறான். இவை மூன்றும் வலிமைமிக்க சக்திகள்; வலிமைமிக்க நிலைகள். ஆகவே அடிப்படையில் மனிதன் நேர்மையானவனாக இல்லை யென்றால் பணமும், பதவியும், புகழும் மனிதன் என்ற தலைவனைத் தலைகீழாக மாற்றிவிடுகின்றன.

'அரசியல் ஓர் அயோக்கியனை உருவாக்குவதில்லை. உள்ளே ஓர் அயோக்கியன் இருந்தால், அரசியல் அவனை வெளிக்கொணர்கிறது; காட்டிக் கொடுக்கிறது' என்று சொல்வார்கள். (Politics does not make a Scoundrel. It reveals the Scoundrel in himself) ஆகவே, அடிப்படை மனிதன் நெறி பிறழ்ந்தவனாக—நேர்மையில் நம்பிக்கை யில்லாதவனாக — அயோக்கியனாக இருக்கும்போது அவன் பெறும் பணம், அநியாயங்களுக்கு வாய்ப்பூட்டு போடுகிறது. அவன் பெறும் பதவி, அக்கிரமங்களுக்குத் துணை போகிறது. அவன் பெறும் புகழ், உண்மையை மறைக்க உதவுகிறது.

பணமும்,பதவியும், புகழும்—மனிதன் ஏறவேண்டிய ஒரு நியாயமான ஏணிப்படிகள்தான். ஆனால், பெரும் பாலான மனிதர்கள்—தலைவர்கள் பணம் நிரந்தரம், பதவி நிரந்தரம், புகழ் நிரந்தரம் என்ற இறுமாப்பில் தங்கள் நினைவை இழக்கிறார்கள்.

பணமும், பதவியும், புகழும் மக்களுக்குப் பணி செய்வதற்குப் பதில், இந்த நாட்டில் ராட்சச ரூபம் எடுத்து ஆணவத்துக்கும் சர்வாதிகாரத்துக்கும் தான் தோன்றித்தனத்துக்கும் சாட்சி சொல்கின்றன.

பணம், பதவி, புகழ் என்ற மூன்றையும் ஏன் ஒரு மனிதன் நாடுகிறான்? சமூக அந்தஸ்து பெற, சமுதாய அங்கீகாரம் பெற.

வாழ்க்கைப்படியில் ஏறும் மனிதன், பணத்தை—செல்வத்தை விரும்புகிறான். அவன் வசதிகளுடன் வாழ விரும்புகிறான். இதன்மூலம் ஒரு சமூக அந்தஸ்தை அவன் பெறுகிறான். இந்தப் புலனாகாத சமூக அந்தஸ்து, பணம் சம்பாதிப்பதற்கான அடிப்படை மனத்தூண்டுகோலாய் அமைகிறது.

மனிதன் பதவியை விரும்புகிறான்—அது தரும் செல்வாக்குக்காக, அதிகாரத்துக்காக. தான் செய்ய விரும்புவதைச் செய்ய அதிகாரம் தேவை. அந்தச் சட்டபூர்வமான அதிகாரத்தைப் பதவி தருகிறது. ஒரு சாதாரண மனிதன் எம்,எல்.ஏ. ஆகும் போதும், பின் அமைச்சராகும்போதும் நடப்பது இது தான். அவன் அதிகாரங்களைப் பெறுகிறான். இதுவும் புலனாகாத மனத்தேவைதான். அதிகாரம் ஒரு உரிமையைக் கொடுக்கிறது.

அடுத்து, 'பிறர் தன்னை நேசிக்க வேண்டும்; இந்த நாடே தனக்காக அழவேண்டும்' என்ற ஓர் ஆசை அவன் உள்ளத்தில் துளிர்க்கிறது. இதுதான் புகழ்த் தாகம். இதுதான் இந்தச் சமுதாய அமைப்பில் ஒரு தலைவன் அடையக்கூடிய உச்சகட்டம். அரசாங்கத்தில் பணம் இருக்கிறதோ இல்லையோ, தன் புகழுக்காக அவன் வாரி வழங்குகிறான். அங்கே புகழ்த் தாகம் வேலை செய்கிறது. பாராட்டுபவர்களை—'யெஸ்மென்' களை அமைச்சர் குழுவாக்கி அருகில் வைத்துக்கொள் கிறான். அங்கேயும் புகழ்த் தாகம்தான் வேலை செய்கிறது.

இந்தப் பணமும், பதவியும், புகழும் எப்படிச் சில தலைவர்கள் வாழ்வில் விளையாடியிருக்கின்றன என்பதைப் பார்ப்போம்,

ஜிம்மி கார்ட்டர் அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி. அவர் நிலக்கடலை பயிரிட்டு விவசாயியாக உழைத்துச் சம்பாதித்தார். கஷ்டப்பட்டு உழைத்துச் சம்பாதித்து, தன் பணத் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டார்.

அடுத்து, அவர் மாநில கவர்னரானார். பின், அமெரிக்க நாட்டின் ஜனாதிபதியானார். இதன்மூலம் அவரது பதவி, அதிகார ஆசைகள் பூர்த்தி பெற்றன. மூன்றாவது நிலையில் அவர் இஸ்ரேல், எகிப்து நாட்டுத் தலைவர்களை அழைத்து, ஒரு சமாதான உடன்படிக்கை செய்து வைத்தார். இதன் மூலம் அவர் உலகப் புகழ் பெற்றார்.

பணம், பதவி, புகழ் என்ற ஒவ்வொரு நிலையிலும் அவர் அதன் எல்லையைக் கடக்கவில்லை. ஏனெனில், அடிப்படையிலே அங்கே ஒரு நல்ல மனிதர் இருந்தார். நாட்டின்பால் அக்கறை கொண்டவர் இருந்தார். மக்களை நேசிக்கும் உண்மையான உள்ளம் உள்ளே இருந்தது. ஜனாதிபதிப் பதவியை விட்டுச் சாதாரணக் குடிமகனாக வாழ்ந்தபோதும், ஏழை மக்களுக்காக வீடு கட்டும் பணியில் ஈடுபட்டுத் தச்சுவேலை செய்தார் கார்ட்டர், சென்ற ஆண்டு நியூயார்க் நகரில்.

கார்ட்டருக்கு முன்பு இருந்த ஜனாதிபதி ரிச்சர்டு நிக்ஸனைக் கவனியுங்கள்.

பணத் தேவையைப் பூர்த்தி செய்ய வழக்கறிஞராக வாழ்வைத் துவங்கினார். பின், பாராளுமன்ற உறுப்பினர், துணை ஜனாதிபதி, ஜனாதிபதி என்ற பதவிகள் மூலம் பதவியையும் அதிகாரத்தையும், அது தரும் அந்தஸ்தையும் பெற்றார். வியட்நாம் யுத்தத்தை

நிறுத்தியதன் மூலமும், சீனாவுடன் ஏற்படுத்திய உறவின் மூலமும் புகழ்பெற்றார் நிக்ஸன்.

பணமும் பதவியும் அவரை எப்படி ஆட்டிப் படைத்தன என்பதைக் கவனியுங்கள்.

நிக்ஸன் துணை ஜனாதிபதியாக இருக்கும்போது, தன் மனைவிக்காக விலையுயர்ந்த 'மிங்க்' கோட்டை இனாமாகப் பெற்றுப் பெரும் அவப்பெயர் அடைந்தார். பணத் தேவை செயல்படுவதைக் கவனியுங்கள்.

அடுத்து, ஜனாதிபதி பதவியிலிருந்தபோது எதிர்க் கட்சியின் தேர்தல் வியூகங்களைத் திருட முற்பட்டு 'வாட்டர்கேட்' ஊழலில் மாட்டிக்கொண்டு ஜனாதிபதி பதவியிலிருந்து இறக்கப்பட்டார். பதவியின் அதிகாரம் தவறாகப் பிரயோகிக்கப்படும்போது, வெளிநாடுகளில் ஒரு தலைவனுக்கு என்ன நேர்கிறது என்பதைக் கவனத்தில் கொள்ளுங்கள்.

நிக்ஸன், அடிப்படையில் நாணயமில்லாத மனிதர். அது அவரை வாழ்நாள் பூராவும் துரத்திக் கொண்டே வந்தது. உலகின் மிகப் பெரிய ஜனாதிபதிப் பதவிகூட அவருக்குப் புகழைத் தரவில்லை.

நமது நாட்டுத் தலைவர் காமராஜரை எடுத்துக் கொள்ளுங்கள்.

பணத்தேவை—

அவரை ஒன்றும் செய்யவில்லை. அவர் ஒரு பிரம்மச்சாரி. வாடகை ட்டில் குடியிருந்தார்.

பதவித் தேவை—

முதல்வர் பதவியிலிருந்தபோதும் காமராஜ் பிளான் என்று கொண்டுவந்து, பதவியிலிருந்து தானே இறங்கிய பெருமனிதர் அவர்.

புகழ்த் தேவை—

லால்பகதூர் சாஸ்திரியையும் இந்திரா காந்தியையும்தான் பிரதமராக்கினாரே தவிர, தன்னை முன்னிறுத்திக் கொள்ளவில்லை. அவர், தன் புகழைத் தேடவில்லை.

இத்தகைய பின்னணியில், இன்றைய தலைவர்களை எடைபோடுங்கள். அவர்களுடன் மகாத்மா காந்தி, நேரு மற்றும் ஓமந்தூர் ராமசாமி, ராஜாஜி, குமாரசுவாமி ராஜா போன்றவர்களையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.

கொள்கைச் சித்தர் என்று சொல்லிக்கொண்டு பதவியேற்ற எத்தனை பேர் சபலச் சித்தர்களாக உலவி வருகிறார்கள் என்பது விளங்கும். சொந்த வாழ்வில் நெறிமுறை பாழ்படுகிறது. இவர்கள் சமூகத் தலைவர்கள் அல்ல; சமூக எதிரிகள்.




## நேர்வழியைப் பார்...

“தமிழர்களாகிய நாம், பம்பாய்க்கும் பூனாவுக்கும் டில்லிக்கும் போய்க் குடியேறுவது ஊழியம் செய்ய. மாறாக, அங்கிருந்து பஞ்சாபியர்களும் சீக்கியர்களும் மார்வாடிகளும் குஜராத்தியர்களும் தமிழ்நாட்டுக்கு வருவது சொந்தமாகத் தொழில் செய்ய. நம் காலிலே நின்று சொந்தமாகத் தொழில் பண்ணும் மனோபாவம் நம்மிடையே குறைவு. ‘கஷ்ட நஷ்டம் ஏதாவது வந்தால்...?!’ என்று சொல்லி இறங்கப் பயப்படுபவர்கள் நாம்” என்று ஒரு கூட்டத்தில் பேசிவிட்டு அமர்ந்தேன்.

ஒரு நல்ல வேலையில் அமர்ந்து நிரந்தர வருமானத்தைப் பெற்றுவரும் ஒரு நடுத்தர வயதுக்காரர் எழுந்து, “மேலும் மேலும் பணம் சேர்க்கும் ஆசை தேவை

தானா...? அந்த ஆசைக்கு ஓர் எல்லை இல்லை. பிறகு மனிதன் நிம்மதியை இழப்பான். நிம்மதியற்ற வாழ்க்கை யைத்தானே பணக்காரர்கள் அனுபவித்துக்கொண் டிருக்கிறார்கள்!'' என்றார்.

நிறையப் பணம் சம்பாதித்தால் நிம்மதி போய் விடுமாம்! அதற்காகத்தான் இவர் பணம் சேர்க்காமல் இருக்கிறாராம்! அதை என்னால் ஒரு கணம் நம்ப முடியவில்லை. இத்தகைய 'லாஜிக்'குகள் நிறைந்த ஒரு சமுதாயத்தை எப்படி மாற்றுவது...?

கையாலாகாத ஓர் இனம் எப்படியெல்லாம் தனது தேக்க நிலைக்குத் தனது செய்கைகளை நியாயப்படுத்து கிறது என்பதை நான் அங்கே கண்டேன்.

செல்வத்தைப் பெருக்கி ஒரு மூலதனத்தைக் கையில் வைத்துக்கொண்டால் நாம் வசதியாக இருக்க முடியும். நமது மூலதனத்தை முதலீடாக வைத்துத் தொழில் துவங்கலாம். நிறையப் பொருளை உற்பத்தி செய்வதன் மூலம், நம்முடைய வாழ்க்கைத்தரம் மட்டுமல்லாது எல்லோருடைய வாழ்க்கை வசதிகளையும் பெருக்கலாம். இதை அறிந்துதான் வள்ளுவர், 'செய்க பொருளை' என்றும், 'பொருளிலார்க்கு இவ்வுலகமில்லை' என்றும் கூறினார். 'பணத்தினைப் பெருக்கு' என்றார் பாரதியார்.

ஆனால், தொழில் மூலம் செல்வம் சேர்ப்பவனை 'சுரண்டுபவன்' என்று கேலி பேச நம்மிடையே சிலர் பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறார்கள். செல்வம்—பணம் என்பது நமது உழைப்பின் பலன். நமது உழைப்புக்கும் திறமைக்கும் ஈடாக நாம் பொருளைப் பெறுகிறோம். தவறான வழிகளில் பணம் சம்பாதிப்பது என்பது வேறு விஷயம்.

எல்லோராலும் தொழில் செய்ய முடியாது. அதற்குச் சில தனித் திறமைகள் தேவை. ஒரு குறிப் பிட்ட தொழிலில் மிகுந்த ஈடுபாடும் திறமையும் இருக்க வேண்டும். செய்யப்போகும் தொழில்பற்றிய தொழில் நுணுக்கமும், தொழில் செய்த அனுபவமும் தேவை. அதற்கு மக்கள் மனோபாவத்தையும், மக்கள் தேவையையும், அது செல்லும் திசையைக் கணிக்கும் ஒரு கூரிய நோக்கும் தேவை. 'கஷ்டம் வரும், நஷ்டம் வரும், அதை ஏற்பேன். ஒரு நாள் வெற்றி காண்பேன்' என்கிற மனோபாவம் வேண்டும். மக்களுக்கு இதன் மூலம் தொண்டு செய்கிறோம். அவர்களுடைய வாழ்க்கை வசதிகளைப் பெருக்குகிறோம் என்ற உணர்வு வேண்டும்.

இத்தகைய திறமை இருப்பவர்கள்தான் தொழில் செய்து வெற்றி காண்கிறார்கள். நம்மில் ஒரு சிலர் தான் இத்தகைய திறமைகளைப் பெற்றிருக்கிறார்கள். அவர் கள் சுரண்டுபவர்கள் அல்ல. ஒரு பத்திரிகையை நடத்து பவர்களாயினும் சரி, ஒரு பிளாஸ்டிக் பொருளையோ, ஒரு சட்டை வேஷ்டியையோ, புடவையையோ உற்பத்தி செய்பவர்களாயினும் சரி; அவர்கள் சமூகத்துக்குத் தேவைப்படுகிறவர்கள். சமூகத்தேவையைப் பூர்த்தி செய்பவர்கள்.

பணம் சம்பாதிப்பவர்களைப் பார்த்துப் பொறாமைப் படுவதால், நாம் நமது கையாலாகாத்தனத்துக்குச் சப்பைக்கட்டு கட்டுகிறோமே ஒழிய, நமது பாரபட்ச மற்ற கண்ணோக்கினையோ, திறமைகளையோ நாம் வளர்ப்பதில்லை.

குடந்தையில் முதன்முதலாக வி.ஆர். மூர்த்தி என் பவர் ஹோமியோபதி இன்ஸ்டிடியூட்டைத் திறந்தார்.

'ஹோமியோபதி மருத்துவத்தைத் தபால்மூலம் போதித்து, பின் அவர்களுக்கு நேரடிப் பயிற்சி கொடுத்து ஹோமியோபதி டாக்டர்களாக ஏன் ஆக்கக்கூடாது?' என்ற ஓர் எண்ணம் தோன்றியது அவருக்கு! இது, நல்ல தொழிலாகப் பெருகியது. மனிதர் பணக்காரராகிப் பெரிய வீடும், ஹோமியோபதி மருத்துவமனையும் கட்டியபோது அருகிலிருந்தவர்கள் பலரும் பலவிதமாகப் பேசினார்கள். தங்கள் பொறாமையை—அவரைக் கேவலப்படுத்தும் சொற்களின் மூலம் வெளிப்படுத்திக் கொண்டார்கள். மனிதர் தன்னுடைய ஹோமியோபதி கழகத்தின் முன்வாசலில் தன் பெயரின்கீழ் ஒரு வாசகத்தைப் பொறித்துவைத்தார். 'உழைப்பால் உயரலாம், பொறாமையால் அல்ல...' என்று.

பணம் படைத்த மனிதர்கள், தங்களுக்குப் பின்னால் பலருக்கும் வாழ்வு தரும் தொழில்களையும், வழிமுறை களையும் விட்டுச் செல்கின்றனர். அமெரிக்காவில் ஆண்டரூ கார்னகி என்ற செல்வந்தர், சுமார் 800 புத்தகச்சாலைகளைச் சிறு கிராமங்கள்தோறும் நிறுவ கோடிக்கணக்கில் டாலர்கள் பொருள் உதவி செய்தார். ஹென்றி போர்டின் மூலதனத்திலிருந்து வரும் பணத்தைக்கொண்டு நம்முடைய தஞ்சை மாவட்டத் தில்கூட விவசாய அபிவிருத்திகள் நடந்தன!

பழைய நாட்களில் நமது செல்வந்தர்கள், கோயிலுக் கும் குளத்துக்கும், சத்திரங்களைக் கட்டிப் பேணவும் அங்கே தண்ணீர்ப் பந்தல் ஏற்படுத்துவதிலும் தங்கள் பணத்தைச் செலவிட்டனர்.

ஒரு நாட்டின் பொதுச் சொத்தை அதிகப்படுத்து வது அமெரிக்காவிலும் சரி, ஜப்பானிலும் சரி, ஜெர்மனி

யிலும் சரி, கொரியாவிலும் சரி—அந்த நாட்டுச் செல்வந்தர்களது தீர்க்கதரிசனமும் திட்டங்களும்தான்.

இதை உணராமல், பொன் முட்டையிடும் வாத்துகளை நாம் இங்கு அறுத்துப் பார்க்கிறோம். இது முட்டாள்தனம்.

நிம்மதி என்பது ஒரு மனநிலை. அது பணக்காரர்களுக்கு இருப்பதில்லை, ஏழைகளுக்குத்தான் இருக்கிறது என்பது ஆதாரமற்ற வாதம்.

பணக்காரர்களாய்ப் போய்த்தான் நிம்மதி இழக்க வேண்டும் என்பதில்லை. ஏழை நிம்மதியாக வாழ்கிறான் என்பதுமில்லை.

ஒரு மனிதன் வசதிகளுடன் வாழவிரும்புவது பாவமல்ல. அதன்மூலம் எந்தப் புனிதமும் பாழாவதில்லை. 'தனது மகிழ்வைத் தேடும் முயற்சியில் ஈடுபட மனிதனுக்கு முழு உரிமை இருக்கிறது. அது பிறருடைய உரிமைகளில் தலையிடாத வரையில்' என்று தனி மனித சந்தோஷத்துக்கு உத்தரவாதமளிக்கிறது அமெரிக்க குடிமக்கள் சாசனம்!

நாம் ஏழ்மையில் இருந்தது போதும்; நாடு ஏழ்மையில் அல்லலுறுவது போதும். ஏழ்மை கடவுளின் விருப்பமல்ல. இவ்வுலகின் எல்லா வசதிகளும் நலன்களும் நமக்காகத் திறந்துதான் வைக்கப்பட்டிருக்கின்றன.

நம்மை நாமே வருத்திக்கொள்ள, வறுமையால் கஷ்டப்பட ஏற்பட்டதல்ல இந்த வாழ்க்கை. நமக்காகவும் பிறருக்காகவும் மகிழ்வுடன் வாழத்தான் இந்த உலகம் படைக்கப்பட்டிருக்கிறது. இதுதான் உண்மை.

ஒரு சமுதாயத்தின், சாதனையின் உறைகல்லாக விளங்கும் காலத்தைப் 'பொற்காலம்' என்று சொல்கிறோம். வசதியான வாழ்க்கையின் அடிப்படையில் மனிதன் தன் பூரணத்துவத்தை வெளிக்கொணரும் நிலையைச் சரித்திரத்தின் பொற்காலங்களில் காண்கிறோம்.

தம்பீ!

தமிழ்நாட்டில் பிச்சைக்கார மனோபாவம் மிகுதியாகிவிட்டது. இனாமாக எல்லாவற்றையும் அரசாங்கம் கொடுக்கும் என்று மக்களை நம்பவைத்து, உழைக்க விரும்பாத ஏழைகளை அரசாங்கம் உருவாக்கி வருகிறது. இந்த அழகில் 'பணத்தினைப் பெருக்கினால் நிம்மதி போய்விடும்' என்று நீ தத்துவம் பேசாதே. நீ கையாலாகாதவனல்ல. நேர்வழியைப் பார்! ஊர் உலகத்தைப் பார்! உயர்ந்தோரை, நன்மை செய்தோரைப் பார்.

தம்பீ, உழை...பொருள் சேர். வளமிக்க நாட்டை உனக்கும் உன் சந்ததிகளுக்குமாக ஏற்படுத்து. பாரதியின் வீர சபதத்தை மேற்கொள்.

'இன்னல் வந் துற்றிடும் போததற் கஞ்சோம்,
ஏழைய ராகி இனி மண்ணில் துஞ்சோம்.'




## வீராணத்தைக் கைவிட்டார்கள்... தெலுங்கு கங்கையை எடுத்துக் கொண்டார்கள்...

ஆளுங்கட்சியைக் குறை கூறவேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கமில்லை; நோக்கமாயிருக்கக் கூடாது. ஆளுங்கட்சியிலே சில நல்ல திட்டங்களையும் செய்திருக்கிறார்கள் அல்லது செய்ய முனைந்திருக்கிறார்கள். இதில், கிராமத் தன்னிறைவுத் திட்டம் என்பது ஒன்று. இன்னும் ஒருசில நல்ல காரியங்களைக் குறிப்பிடலாம்.

கிராமத் தன்னிறைவுத்திட்டத்தின் பிரச்னையே அது நன்கு செயல்படுத்தப்படாததுதான். என்னதான்

நோக்கம் நல்லதாக இருந்தாலும் அது செயல்படுத்தப் படாதபோது இருப்பதும் ஒன்றுதான், இல்லாததும் ஒன்றுதான். அதனால் பலன் ஏதும் இல்லை; அதன் முழுமையான பலன் மக்களிடம் போய்ச்சேரவில்லை.

அதேபோல அசந்து மறந்து இந்தப் பிற்படுத்தப் பட்டோருக்கான ஒதுக்கீட்டில் 'பொருளாதார ரீதியில் பிற்படுத்தப்பட்டோருக்கு முக்கியத்துவம் கொடுப்பது பற்றி' ஒரு நல்ல சட்டத் திருத்தம் கொண்டுவர நினைத்தபோதும் சில எதிர்ப்புகளைக் கண்டு பயந்து பின்வாங்கிவிட்டது இந்த அரசாங்கம்.

வீராணம் ஏரி நீரையும், நெய்வேலி நிலத்தடி நீரையும் சென்னைக்குக் கொண்டு வரும் திட்டத்தைக் கைவிட்டுவிட்டு, தெலுங்கு கங்கா திட்டத்தை எடுத்துக் கொண்டார்கள். அங்கும் ஆசை இருந்த அளவுக்கு அவர்களால் முழுமூச்சுடன் செயல்படுத்த முடிய வில்லை; செயல்படுத்தவில்லை.

நல்லவர்களும், அறிஞர்களும் தவற்றைச் சுட்டிக் காட்டினால் அரசாங்கம் திருத்திக்கொள்ளாதா, நாட்டுக்கு நல்லது பிறக்காதா என்ற ஆதங்கத்தில்தான் பேசுகிறார்கள், எழுதுகிறார்கள். அதைப் புரிந்து கொள்ளாமல் அப்படி எழுதுபவர்கள்மீது குறைசொல்லு வது, அவர்களுக்கு ஒரு நோக்கம் கற்பிப்பது, நாம் பாரபட்சமில்லாமல் விஷயங்களை அணுகமுடியாதவர் கள் என்பதைத் தான் காட்டுகிறது. அதைவிட, 'இவர் கள் என்ன செய்யமுடியும்? எழுதினால் எழுதட்டும்! வோட்டுப் போடும் பொதுமக்கள் என்னை நம்பும்வரை இவர்களை ஏன் சீந்த வேண்டும்?' என்கிற நினைப்பு, ஓர் அலட்சிய மனோபாவத்தையே காட்டுகிறது. அது

ஜனநாயகம் ஆகாது. நாட்டுக்கு நன்மை செய்வது ஆகாது.

ஆளுங்கட்சி ஆட்சியில் இருப்பதால் நல்லது செய்யவும் வாய்ப்புண்டு. தவறுகள் செய்யவும் வாய்ப் புண்டு. மக்கள் தந்த அரிய வாய்ப்பை உபயோகப் படுத்தாமல் 'சும்மா இருப்பதே சுகம்' என்று அரசாங்கம் இயங்குமானால், அரசாங்கம் தேக்கநிலையை அடையும். அதுதான் நேர்ந்து கொண்டிருக்கிறது.

நாட்டுக்கு நன்மை செய்வதற்காகத் திட்டங்கள் தீட்டி அதைச் செயல்படுத்துவதற்காக ஓர் அரசாங்கம் இருக்கிறதேயொழிய, எதிர்க்கட்சியைச் சமாளிப்பது தான் இரவு பகலாக வேலை என்று போனால் என்ன நேரும்? தமிழகத்தில் இன்று நிலவும் நிலையில்தான் அது முடியும்.

மத்திய அரசுடன் இணைந்து செயல்பட்டால் மாநில அரசு அதிகப் பலன்களைப் பெற முடியும் என்பது உண்மை என்பதற்காக மத்திய அரசிடம் நல்ல பிள்ளை யாக நடந்துகொள்வதை மட்டுமே செயல்படுத்தி, நமது உரிமைகளையும் நியாயங்களையும் அவர்களிடம் அடகுவைக்க வேண்டுமா என்ன? அடகுவைத்துவிட்ட நிலைதான் இன்றைய நிலை!

மத்திய அரசின் நட்புறவின்மூலம், மாநில அரசுக்குப் பெரும் திட்டங்கள், தொழில்கள், வேலைவாய்ப்பு, காவிரி நீர் என்று பல்வேறு துறைகளிலும் நாம் பங்கு பெற்றுப் பயனடையவில்லை என்கிறபோது, அவர் களிடம் 'நல்ல பெயர்' நமக்கு எதற்கு? நாட்டில் நடந் திருக்கும்—நடந்து கொண்டிருக்கும் முறைகேடுகளி லிருந்து மத்தியப் புலனாய்வு துறையிலிருந்து தங்களைக் காப்பாற்றிக்கொள்ளத்தான் நம் அரசு மத்திய அரசிடம்

பணிந்து பழகுகிறார்கள் என்ற சந்தேகம் மக்களிடையே பரவாதோ!

எந்த ஒரு திட்டத்திலும், எந்தச் சமயத்திலும் ஆளுங்கட்சிதான் ஒரு முடிவெடுத்துச் செயல்பட வேண்டும். அதனால், அவசரத்தில் ஆளுங்கட்சி ஒரு தவறு செய்தாலும் மக்கள் அதை மன்னிப்பார்கள். பதவியிலிருக்கிறோம் என்ற அகம்பாவத்தில் வேண்டு மென்றே அநியாயமும் சுரண்டலும் செய்பவர்களைத் தான் நாடும், மக்களும் மன்னிக்கமாட்டார்கள்.

வரியாக மக்கள் கொடுக்கும் பணத்தை, இனாமாகச் சில ஏழைகளுக்குக் கொடுத்து நிரந்தரமாக அவர்களது அபிமானத்தைப் பெற்று, பதவியிலிருப்பது சாமர்த் தியம் ஆகாது. அதன் மூலம் ஏழைகளை நாம் நிரந்தர ஏழைகளாக—கையேந்திகளாக வைத்திருக்கிறோம். இந்த அடிமட்டத்து ஏழைகளை நாம் உண்மையில் ஏமாற்றுகிறோம். அதே சமயம் உழைத்துச் சம்பாதித்து வரி கொடுக்கும் இனத்துக்கு—உழைக்கும் இனத்துக்கு நாம் துரோகம் செய்கிறோம்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு தலைவன் தனக்கு மட்டுமே நன்மை செய்துகொள்ளவோ அல்லது தன்னைப் பதவியில் வைத்திருக்கும் தன் கட்சித்தலைவர் களுக்கு மட்டுமே நன்மை செய்துகொள்ளவோ அல்லது தனது கட்சிக்கு சகாயம் தேடிக்கொள்ள மட்டுமே ஒரு ஜனநாயகத்தை உபயோகிப்பானானால் அவனுக்கும், ஒரு கொள்ளைக் கூட்டத்தை வைத்துக்கொண்டு ஊரைக் கொள்ளையடிப்பவர்களுக்கும் ஏதும் வித்தியாச மில்லை.

அரசாங்கம் என்பது பொது நன்மைக்காக நடத்தப் படும் ஒரு ஸ்தாபனம். வோட்டுப் போட்டவர்களும்,

எதிர்த்துப் போட்டவர்களும், போடாமலிருந்தவர்களும் அதற்குள் அடங்குகிறார்கள். எல்லோருக்குமே எல்லா பொது நன்மைகளும் கிடைக்கவேண்டும். ஆதரித்து வோட்டுப்போட்டவர்களுக்கு மட்டுமே நன்மை பயக்கும் நிலை வரக்கூடாது. ஆனால், கடந்த இருபதாண்டு காலமாக அரசாங்கம் கட்சி அரசியலாக—ஒரு கட்சியின் அரசாங்கமாக மாறிவிட்டது வருந்தத்தக்கது.

இந்த நிலையில் படித்தவர்களுடைய கடமை என்ன என்ற கேள்வி எழுகிறது.

கிராமத்து மக்கள் 'உழைத்து உயர்வேன்...இது என் கிராமம்...இது நான் கொடுக்கும் வரி...நான் நியாயத்துக்குக் கட்டுப்படுவேன்' என்றெல்லாம் விழிப்புணர்வு பெறாதவரை அரசியல்வாதிகள் ஏமாற்றிக்கொண்டே தான் இருப்பார்கள். அதனால் படித்தவர்கள், நல்லவர்கள், நமது சமுதாயத்தின்பால் அக்கறை கொண்டவர்கள் ஜனநாயகத்தின்பால் நம்பிக்கை கொண்டவர்கள் இவர்கள் எல்லோரும், அடிமட்டத்து மக்களிடம்—முக்கியமாக, கிராமத்து மக்களிடம்—விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

கிராமத்து மக்களுக்கு உழைக்கவும், பொருள் சம்பாதிக்கவும் வழி வகுக்கும் வேலை வாய்ப்பை நாம் தரும்போது, அவர்கள் தன்மானத்தின் பெருமையை உணர்வார்கள்.

பொருளாதார வசதி பெறுகிறவர்கள் பெண்களானாலும், ஏழைகளானாலும் அவர்கள் 'விடுதலை' பெறுகிறார்கள் என்பதுதான் உலகம் கண்ட உண்மை. ஏழைகள் நம் நாட்டில் விடுதலை பெற வேண்டும்.

நாடு நல்ல திருப்பத்தைப் பெற அந்த விழிப்புணர்வைப் பொதுமக்களிடத்தும் வேலைவாய்ப்பை ஏழை மக்களுக்கும் ஏற்படுத்த வேண்டும்.




## நீதிக்காகப் போராடுங்கள்!

**வா**ழ்க்கை என்பது நல்லவனாக வாழ்வது மட்டுமல்ல. அநியாயத்துக்கு எதிராகப் போர்க்கொடி தூக்கிப் போராட வேண்டுமெனில், அதைச் செய்வது தான் தர்மம்; நெறி! மகாபாரதப் போர், அதர்மத்துக் கும் அநியாயத்துக்கும் எதிராக எழுந்த போர். பாண்ட வர்கள் 'ஏதோ நல்லவர்களாக வாழ்ந்துவிட்டுப் போவோம். அநியாயக்காரனான துரியோதனாதி களுக்குக் கடவுள் கூலி கொடுப்பார்' என்று பேசாமல் போயிருக்கலாம்! அவர்கள் அப்படிச் செய்யவில்லை. அக்கிரமத்துக்கெதிராகப் போர் தொடுத்தார்கள். இன்றும் எத்தனையோ அநீதிகள் இன்றைய சமுதாயத் தில் நடைபெறுகின்றன. என்றாவது ஆன்மீகத் தலைவர்

கள் முன்வந்து உண்மையின் பக்கம் நின்றார்களா? வழி காட்டினார்களா? போராடினார்களா?

சத்தியத்துக்கும் நியாயத்துக்கும் இவர்கள் உறுதுணையாக நின்றால் அல்லவா சத்தியம் தழைக்கும். முற்றும் துறந்த முனிபுங்கவர்கள் எதைக் கண்டு பயப்படு கிறார்கள்? இவர்கள் திருமூலரையும், தேவாரத்தையும், பகவத்கீதையையும் பற்றிப் பிரசங்கம் செய்வது எதைப் போலிருக்கிறது? ஆரவாரம் மிகுந்த அழகிய தேரில் உற்சவமூர்த்தி இல்லாத ஊர்வலம் போலிருக்கிறது. சமுதாய அநீதிகளை இன்று இவர்கள் கண்டித்தால் தானே நாளை அவர்கள் சமுதாய நெறிகளைப்பற்றிப் பேசும்போது, மக்கள் அவர்கள் சொல்வதை நம்புவார் கள். பின்பற்றுவார்கள். நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மடங்களின்—ஆதீனங்களின்—கோயில்களைக் கவனி யுங்கள். சில மடங்களுக்குப் பன்னிரண்டாயிரம் வேலி (அறுபதாயிரம் ஏக்கர்) நிலம் கோயிலுக்குச் சொந்தமாக இருக்கிறது. எனினும், இவர்கள் கட்டிக்காக்கும் கோயில் களில் விளக்கில்லை, வெளிச்சமில்லை; வேலை செய்வோ ருக்குச் சோறில்லை; சம்பளம் கொடுக்கப்படாமல் இருக் கிறது.

என்ன காரணம்?

அரசாங்கமும், அதிகாரிகளும் இவர்களது நிர்வாகத் தில் குறுக்கிடுவதாகக் கூறுகின்றனர். கோயில் நிலத்தை விவசாயம் செய்யும் விவசாயிகளிடமிருந்து, கோயிலுக் குச் சேரவேண்டிய ஒரு சிறுபகுதி வருமானத்தைக்கூட இவர்களால் வசூலிக்க முடியவில்லை.

‘கோயில் வாழ்ந்தால்தான் ஊர் வாழும்’ என்று நினைத்து, அன்று நமது முன்னோர்கள் பணம்

செலவழித்துக் கோயில் கட்டினார்கள்; கோயில்களுக்கு நிலம் எழுதி வைத்தார்கள். இன்று ஆண்டவனுக்குத் தன் சம்பளத்தின் ஒரு பகுதியைப் பிற மதத்தினர் அர்ப்பணிப்பதைப் பார்க்கிறோம். மாறாக—இந்துக்கள் கோயில் சொத்தைச் சூறையாடி உண்டு கொழுக்கின்றனர்! என்னே கடவுள் பக்தி!

இது அநியாயமில்லையா? அக்கிரமம் இல்லையா? ஆண்டவனுக்கே சூது செய்தால் என்னாகும்? ஆண்டவனையே கொள்ளையடித்தால் ஊர் வாழுமா?

இதைக் கோயில் நிர்வாகிகள் எனச் சொல்லிக் கொள்ளும் இந்த தர்மகர்த்தாக்களும் ஆதீனகர்த்தர்களும் கண்டிக்காவிட்டால், நீதிக்காகப் போராடாவிட்டால் இவர்கள் என்ன ஆன்மீகத் தலைவர்கள்?

துணிவில்லாத ஆன்மீகத் தலைவர்கள் யாருக்கு வழி காட்ட முடியும்? தன்னையே காத்துக்கொள்ளத் தெரியாத இவர்கள் எந்தப் பொதுவாழ்க்கையைக் காக்க முடியும்? என்ன நெறிகளைப் போதித்துவிட முடியும்?

ஆன்மீகத்தில் துணிவில்லை; நியாயத்தின் குரல் ஒலியைக் காணோம். 'இருப்பது இருக்கிறபடி இருக்கட்டும்; எப்படியோ வாழ்ந்துவிட்டுப் போகிறேன்!' என்பது ஆன்மீகமானால், அந்த ஆன்மீகத்தைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும். அந்த ஆன்மீகம் நமக்குத் தேவை இல்லை.

'மக்கள் தொண்டே ஆண்டவன் தொண்டு' என்றார், சுவாமி விவேகானந்தர். அடிப்படை நியாயங்களுக்காக எழுந்து நிற்க முடியாதவர்கள்—பயப்படுபவர்கள்—என்ன மக்கள் தொண்டைச் செய்துவிட முடியும்?

இவர்களைப்பற்றித்தான் அன்று பாரதியார் பாடினார் ...'சாமிமார்க்கெல்லாம் தைரியம் வளருது; தொப்பை சுருங்குது' என்று...

தொப்பை சுருங்குமா? தைரியம் வளருமா?

அதேபோல இன்றைய தமிழ் அறிஞர்களைப் பாருங்கள். வாழ்நாள் முழுதும் தமிழ் மொழியையும், இலக்கியத்தையும் படித்துத் தங்கள் வாழ்வைத் தமிழ்த் தாய்க்காக அர்ப்பணித்துக்கொண்டவர்கள் இவர்கள்.

'தமிழுக்கு அமுதென்று பேர்...அது எங்கள் உயிருக்கு நேர்' என்று கூட்டம்தோறும் மார்தட்டி, கர்ஜித்து நம்மை எல்லாம் வீரம்கொள்ளச்செய்த இனம்; தமிழின்பால் பற்றுகொள்ளச் செய்த இனம்...இவர்களது தைரியம் எனக்கு வியப்பூட்டியது உண்டு.

மிக முக்கியமான உலகத் தமிழ் மாநாடு இம்முறை வெளிநாட்டில்—மலேசியாவில் நடக்கிறது. அரசியல் கலப்பற்ற இலக்கிய மாநாடு.

திடீரென்று தமிழக அரசு, இந்த இலக்கிய மாநாட்டுக்கு அரசில் பணிபுரியும் எந்தத் தமிழறிஞரும்— தமிழ்ப் பிரதிநிதியும் போகக் கூடாதென்று ஓர் அறிக்கையை அனுப்புகிறது.

'இன்னுயிர் ஈந்தும் தமிழினைக் காக்கும்' பெரும் பான்மைத் தமிழறிஞர்கள் என்ன செய்கிறார்கள்? 'தமிழை விடு; அரசுக்குப் பணி; சலாம் போடு' என்கிற ரீதியில் தமிழ் மாநாட்டில் கலந்துகொள்ளவில்லை!

'தமிழ் மாநாட்டுக்குப் போகலாம்', 'போகக் கூடாது!' என்று சொல்ல அரசுக்கு எந்த உரிமையும் கிடையாது. ஆனாலும், ஓர் அரசு இதைச் செய்கிறது. இதைவிடக் கொடுமை... 'ஏன்? எதற்கு? இது என்ன

நியாயம்?' என்று கேட்கக்கூடத் தைரியமில்லாத ஒரு தமிழறிஞர் கூட்டம், இதை வாய்மூடி, மௌனியாகி ஏற்றுக்கொள்கிறது!

இவர்களுக்குத் தமிழ் வீரத்தையும் கற்பையும்பற்றிப் பேச, போதிக்க என்ன தகுதி இருக்கிறது? எண்ணிப் பாருங்கள். தமிழ்நாட்டின் வீரப் பரம்பரை ஒரு மண் புழுப் பரம்பரையாக என்று ஆனது? தமிழறிஞர்களுக்கே தைரியம் இல்லையென்றால், தைரியம் சமுதாயத்தில் எங்கே பிரதிபலிக்கும்?

தம்பீ! சமுதாயத்தை வழிநடத்திச் செல்ல வேண்டிய தமிழாசிரியர்களும், ஆன்மீகவாதிகளும் துணிவை இழந்து விட்டார்களென்றால் நாடு எங்கே போகும்?

இது உன் பாரம்பரியமல்ல. இது வீரர்கள் பிறந்த நாடு; விவேகானந்தர்கள் தோன்றிய நாடு; காந்தி பிறந்த நாடு; கண்ணகி போராடிய நாடு.

மறைமலையடிகளும், பரிதிமாற் கலைஞரும்' பாரதியும் பிறந்த நாடு; நக்கீரர் பிறந்த நாடு!

ஆன்மீகத்தைப் பற்றிப் பேசுவோரிடமும், தமிழைப் பற்றிப் பேசுவோரிடமும் எனக்கு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டது.

தமிழையும், ஆன்மீகத்தையும் வாழ்ந்து காட்டு வோர் தேவை இன்று.

வீரம் மனத்தில் எழுன்கிற ஒன்று.

மனத்தை உறுதி செய்துகொள் நீ!

தைரியத்தைப் பரப்பு; எழுத்திலும், பேச்சிலும்




## சட்டத்தை மீறுவதிலும் ஒரு நியாயம் இருக்கிறது!

மனிதர்கள் ஏன் இருக்கின்ற நிலையை ஏற்றுக் கொள்கிறார்கள்? சங்கடங்களையும் அநியாயங்களை யும் சகித்துக்கொள்கிறார்கள்? நொந்தும் வருந்தியும் பேசுபவர்கள். நிலைமை திருந்துவதற்காக ஏன் ஒரு சிறு துரும்பையும் கிள்ளிப் போடத் தயங்குகிறார்கள்?

ஒரே வார்த்தையில் சொல்லப் போனால், பயம்.

பயம் மக்களைப் பிடித்தாட்டுகிறது. எதிர்த் தால், எதிரி நம்மை ஏதாவது செய்துவிடுவானோ என்ற பயம். தன் குடும்ப வருமானத்துக்கும் தன் குடும்பப் பாதுகாப்புக்கும் ஏதேனும் நிகழ்ந்துவிடுமோ

என்ற பயம். தனியாக நிற்க பயம். தனியாக விடப்படு வோமோ என்ற பயம், பிறர் என்ன சொல்வார்களோ என்ற பயம்.

இந்த பயம், ஒரு போர்வையைப் போர்த்திக் கொள்கிறது. 'இத்தனை பேருக்குமில்லாத அக்கறை எனக்கென்ன வந்தது? எது எப்படிப் போனாலென்ன, எனது அன்றாட வாழ்வு பாதிக்காத வரை?'—இப்படி ஒரு மனோபாவம்; ஒரு சமாதானம்.

'வெள்ளையர் அல்லாதோர் எப்போதும் அடையாளச் சீட்டை வைத்திருக்க வேண்டும்' என்று தென் ஆப்பிரிக்க அரசு சட்டம் இயற்றியபோது, 'எனக் கென்ன வந்தது?' என்று மோகன்தாஸ் காந்தி சும்மா இருக்கவில்லை. 'ஐயோ! எதிர்த்தால் சவுக்கால் அடிப் பார்களே, சிறையில் போடுவார்களே!' என்று பயப்பட வில்லை. எதிர்த்தார்.

"சுயராஜ்யம் எனது பிறப்புரிமை!" என்று இந்தியா வின் மொத்த மக்களுக்காக பாலகங்காதர திலகர் குரல் எழுப்பியபோது—சிறையில் தள்ளுவார்களே, சித்திர வதை செய்வார்களே' என்று அவர் அஞ்சவில்லை.

அன்று அவர் அஞ்சியிருந்தால், சுதந்திர இயக்கம் இத்தகைய விழிப்பையும் வளர்ச்சியையும் பெற்றிருக் காது.

மார்ட்டின் லூதர் கிங், பஸ் ஒன்றில் ஒரு கறுப்புப் பெண்ணுக்காக இழைக்கப்பட்ட அநீதிக்கு எதிராகப் போராடி இருக்காவிட்டால், இன்று அமெரிக்க கறுப்பர் சமுதாயம் எந்த உரிமைகளையும் பெற்றிருக்காது.

உலகம், பயந்துகொண்டிருந்தவர்களால் உருவாக்கப் படவில்லை. உலகம், 'எனக்கென்ன வந்தது?' என்ற சுயநலமிகளால் மாற்றம் அடைந்ததில்லை.

வீரத்தினால்தான் விளைவுகள் நிகழ்ந்திருக்கின்றன.

துணிவினால்தான் துன்பங்கள் அகன்றிருக்கின்றன.

அநியாயங்களுக்கு எதிராக எழுந்த தர்மாவேசத் தால்தான் மக்கள் உந்தப்பட்டிருக்கிறார்கள். உலகில் நியாயம் பிறந்திருக்கிறது.

காலத்துக்குக் காலம் இது நிகழ்கிறது.

இன்று தமிழ்நாட்டில் அநியாயத்துக்கு எதிராகப் போராடும் நிலை இருக்கிறதா என்பதுதான் கேள்வி.

கிராமத்துத் தென்னைமரங்களை அண்ணாந்து பார்க்கிறேன். அங்கே கள் கலயம் கட்டப்பட்டிருக்கிறது. போலீஸ்காரர்கள் 'மாமூல்' வாங்கிக்கொள்ள, கள்ளச் சாராயம் மற்றும் கள் விற்பனை வழக்கமாக நடை பெறுகிறது. கிராமத்துப் பொதுநிலங்களைக் கட்சிவலு வுள்ளவர்கள் சுவாதீனம் செய்துகொண்டிருக்கிறார்கள். பள்ளி ஆசிரியர் ஒருவர் நியாயமான காரணத்துக்காக இடமாற்றம் விரும்பிக் கேட்டால், அதற்குப் பணம் கொடுத்தாகவேண்டும் நீதியையும் நேர்மையையும் போதிக்கும் ஆசிரியர் சமுகத்துக்கே இந்தக் கதி என்றால், நீதியை நேர்மையை எந்த உண்மையுடன் ஓர் ஆசிரியர் போதிக்க முடியும்? அரசாங்கப் பணத்தைப் பொதுநன்மைக்குச் செலவிடுவதற்குப் பதிலாக, பங்கு போட்டுக்கொள்வதற்காகவே ஓர் அதிகார வர்க்கம்; ஓர் அமைச்சர் கூட்டம்.

இன்று அதர்மத்தையும் அநியாயத்தையும் இயல்பான ஒன்றாக ஏற்றுக்கொண்டு. இவ்வுலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது.

எத்தனை நாளைக்கு இது இப்படியே போகும்?

மக்கள் கொதித்தெழ, சட்டங்களை மக்களே தங்கள் கையில் எடுத்துக்கொள்ள இன்னும் எத்தனை கொடுமைகள் நிகழவேண்டும்? இன்னும் என்னென்ன அவல நிலைகள் வரவேண்டும்?

அரசியல்வாதிகள்—அநியாயக்காரர்கள்—அதர்மமே தர்மமாக அரசியல் நடத்துவோர்—எண்ணிப்பார்க்க வேண்டும், பொன்பரப்பியில் என்ன நிகழ்ந்தது என்று.

பொதுப் பணத்தை—பாங்கைக் கொள்ளையிட வந்தவனை, அந்த ஊர் மக்களே ஒன்று திரண்டு கல்லால் அடித்துக் கொன்றார்கள். அங்கே மக்கள் சட்டத்தை மீறியதில் ஒரு நியாயம் இருந்தது.

உப்பு வரியை எதிர்த்து மகாத்மா காந்தி ஒரு பெரிய சத்தியாக்கிரக இயக்கம் நடத்த உப்புக் காய்ச்சினார். சட்டத்தை மீறினார். இந்திய மக்கள் அனைவரும் அதை ஏகோபித்து ஏற்றார்கள்.

வேலை செய்யாது வேலையைத் தங்கப்போடும் அதிகாரிகளை—லஞ்சம் வாங்கும் அதிகாரிகளை, "எங்கள் வரியில் சம்பளம் பெறுகிறீர்கள், வாழ்க்கை நடத்துகிறீர்கள். அதற்கு உண்மையாக உழையுங்கள்" என்று சரமாரியாகக் கேள்வி கேட்டும், அறிக்கை விட்டும் ஒரு பத்துப் பதினைந்து இளைஞர்கள், சில ஊர்களில் 'அறப்போர்' ஒன்றைத் தொடுத்திருக் கிறார்கள். இப்படி ஊருக்கு ஊர், கிராமத்துக்குக்

கிராமம் உழைத்துப் பாடுபடும் மக்கள், ஆணவத்துக்கும் லஞ்சத்துக்கும் ஊழலுக்கும் எதிராகப் போர்க்கொடி உயர்த்தியே ஆகவேண்டும்.

இதில் வேடிக்கை என்னவென்றால், ஒரு சுயநலக் கும்பல் மேலிருந்து கீழ்வரை தங்களுடைய சகாயத்துக்காகச் செயல்படுவதை நம் கண்ணெதிரே தினந்தோறும் நாம் காண்பதுதான்; கண்டும் நாம் வேடிக்கை பார்த்துக்கொண்டிருப்பதுதான்!

இத்தனையும் அறிவு வளர்ச்சிபெற்ற தமிழ்நாட்டில் நிகழ்கிறது. அணுசக்தி மின்நிலையம்வரை விஞ்ஞான வளர்ச்சி பெற்றிருக்கும் அறிவால் முன்னேறிய ஒரு நாட்டில் நடைபெறுகிறது. இது ராணுவ ஆதிக்கத்தின் கீழ் நடைபெறவில்லை; ஜனநாயகத்தின்கீழ் நடைபெறுகிறது. இங்கே ராணுவ அதிகாரியின் சொந்தக்காரக் கும்பல் ஆட்சி செய்யவில்லை. ஆளுங்கட்சி என்ற பெயரில் ஆதாயம் தேடுவோர் ஒன்று சேர்ந்து அடிக்கும் கொள்ளையாக நிகழ்கிறது. ஆதாயம் தேடுவோரெல்லாம் ஒரு கும்பலாகச் சேர்ந்துகொண்டிருக்கிறார்கள், ஆளுங்கட்சி என்ற பெயரில், பொது மக்களுக்கெதிராக.

"நேர்மை இங்கே இயங்கும், நியாயத்துக்கும் உண்மைக்கும் இங்கே இடமுண்டு" என்ற நம்பிக்கையை மக்கள் மொத்தமாக இழக்கும்போது, நாட்டின் இளைஞர்கள் என்ன செய்வார்கள்? உலக சரித்திரம் என்ன சொல்கிறது? "புரட்சி, புரட்சி!" என்று அது ஒலிக்கிறது, இது ஆத்மாவின் ஒலி. சத்தியத்தின் குரல். இதை யாரும் தடுத்து நிறுத்தியதாகச் சரித்திரம் இல்லை.




## சொல்லுக்கும் செயலுக்கும் இடையே—பெருத்த இடைவெளி!

"வறுமையை ஒழிப்போம்" என்ற முழக்கம் காதில் விழ, திரும்பிப் பார்த்தேன். ஒரு பெரிய ஊர்வலம் வந்துகொண்டிருந்தது; சத்தம் காதைச் செவிடாக்கியது.

எண்ணம் வேண்டும்; சொல் வேண்டும்; செயல் வேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. முதலில் எண்ணம் அவசியம். 'வறுமையைப் போக்குவோம்; போக்க வேண்டும்' என்ற எண்ணம் நம்முன் தோன்றி, மலர்ந்து, நமது உடல் பூராவும் வியாபிக்க வேண்டும். அடுத்து நமது எண்ணத்தைச் சொல்லாக, திட்டமாக

பலருக்கும் தெரியப்படுத்த வேண்டும். மக்கள் மனத்தில் ஊடுருவ வேண்டும்.

வறுமையைப் போக்க வேண்டும் என்ற எண்ணம் மேலிடத்திலிருந்து கிளம்பியது; நமது முன்னாள் பிரதமர் இந்திரா காந்தி அறிவித்தார்; பேசினார்; திட்டம் தீட்டினார். கிராமத் தன்னிறைவுத் திட்டம் என்ற ஒரு நல்ல திட்டத்தைத் தமிழக அரசும் கொண்டு வந்தது.

நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். அதற்கு மேல் என்ன செய்தோம்? செயல்படுத்தினோமா? செயல்களைத் தொடர்ந்து கண்காணித்தோமா? பலன் கண்டோமா? வறுமை நீங்கியதா? எங்கே இருக்கிறது கோளாறு?

எண்ணிப் பார்க்கவேண்டும் நாம்! திட்டம் பலன் தந்ததா? ஏன் பலன் தரவில்லை? ஏன் எதிர்மாறான விளைவுகளைத் தந்தது? அதாவது, தன் காலிலேயே நிற்கும் தன்மானம் மிக்க ஒரு கிராம சமுதாயத்தை உருவாக்குவதற்குப் பதில், எதற்கும் அரசாங்க இனாமை —இலவச விநியோகங்களை எதிர்பார்க்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்குவதில் போய் முடிந்தது.

பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்தது என்றால் அதற்கு இதுதான் உதாரணம்!

ஒரு சந்தேகம்.

நாம் வெறும் பேச்சுப் பேசுகிற இனமோ? நாம் செயல்படுத்த விரும்பாத சோம்பேறி மக்களோ? உழைப்பதற்குச் சோம்பல்பட்டு, பேசித் திருப்தி காண்கிற இனமாக மாறிவிட்டோமோ?

ஓர் ஆசிரியரை எடுத்துக்கொள்ளுங்கள். ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ஆனாலும் பல்கலைக்கழகப் பேராசிரியர்

ஆனாலும் அவர் தொழில் போதிப்பது; சொல்லிக் கொடுப்பது. தன் கருத்தை, உலக உண்மைகளை மாணவர்களுக்குப் போதிப்பதுதான் அவர் தொழில். பேசுவதன் மூலமும் எழுதுவதன் மூலமும் அதைச் செய்கிறார். அதுதான் அவர் தொழிலின் கடைசி வேலை (End Product). தான் வாங்கும் சம்பளத்துக்கு அவர் விற்பனை செய்யும் பொருள் அதுதான். இந்தக் கருத்துப் பரிமாற்றத்தை நிகழ்த்தியவுடன் அவர் வேலை முடிந்துவிடுகிறது.

ஓர் அரசியல்வாதியும் அதேபோல தன் பேச்சு மூலம்தான் தன் எண்ணங்களைப் பிறருக்குத் தெரிவிக்கிறார். அதுதான் அவர் விற்பனை செய்யும் 'விளை பொருள்'. பேசுவது, கருத்துப் பரிமாற்றம் செய்வது என்பதே இவர்களது நோக்கமாயிருப்பதால், பேசியவுடன் ஒரு வேலை முடிந்துவிட்ட மன உணர்வு உண்டாகிறது. பேசியவுடன், 'எல்லாம் முடிந்துவிட்டது. என்ற மனப்பழக்கத்துக்கு இவர்கள் ஆளாகிறார்கள்' இது இவர்களது தொழில் ஏற்படுத்தும் மனப்பழக்கம்.

இவர்கள், தங்கள் சொந்த வாழ்வில், 'செயல் வேண்டும்' என்பதை உணர்ந்து செயலுக்கு முக்கியத்துவம் கொடுக்காதவரை, 'வெறும் பேச்சில்' நிறைவு காணும் சமுதாயமாக உருவாவார்கள்.

ஆகவேதான் 'வறுமையை ஒழிக்க வேண்டும்' என்று முழக்கத்தை எழுப்பியவுடன் தங்கள் வேலை முடிந்து விட்டது என்று அரசியல்வாதிகள் எண்ணிக்கொள்கிறார்களோ? 'செயலில் ஈடுபட வேண்டும்; பலன் காண வேண்டும்' என்கிற ஆசை இருக்கிற அளவுக்கு அவர்கள் செயல் அமைவதில்லை.

மற்றொரு நிலைமையும் நாட்டில் நிலவுகிறது. அறிஞர் அண்ணாவின் பேச்சு அந்தக் காலத்தில் எல்லாம் சுமார் மூன்று மணி நேரம் நடக்கும். இன்றைய சினிமா கவர்ச்சி போல, அவர் பேச்சில் ஒரு கவர்ச்சி—போதை—இருக்கும். அதாவது, பேச்சை ரசிக்கிற ஓர் இனமாக நாம் வளர்க்கப்பட்டுவிட்டோம்; வளர்ந்து விட்டோமோ?

சில ஆண்டுகளுக்கு முன்வரை தமிழ் மாநாடுகள் காரைக்குடி கம்பன் விழா என்று—பூம்புகார் சிலப்பதிகார மாநாடு என்று நடைபெற்றுவந்தன. பாரதி விழாவிலும், திருக்குறள் மாநாட்டிலும் எவ்வளவோ அரும்பெரும் வாழ்க்கை நெறிகள் சொல்லப்பட்டாலும், தமிழ் இலக்கியக் கவிநயங்களை ரசிக்கும் ஒரு போக்கே இத்தகைய மாநாடுகளில் மேவி நின்றது.

இலக்கிய மாநாடுகளைக் கவிநய ரசனைக்காகவும், அரசியல் பேச்சுக்களை அடுக்குமொழிக் கவர்ச்சிக் காகவும் நாம் பயன்படுத்தும்போது, பேச்சின் அடுத்த கட்டமான 'செயல்' என்ற ஒன்று துண்டிக்கப்படுகிறது.

தமிழ் இனம் செயல்படாமல் போனதற்கு இவை யெல்லாம் காரணமாயிருக்கலாம். தமிழ்ச் சமுதாய மனோபாவம் நன்கு ஆராயப்பட வேண்டும்.

ஆசிரியர் மகன் ஆசிரியர் என்று நாலு தலைமுறை சென்றால் வெறும் தலைமட்டுமே வீங்கிய இனமும், அரசியல்வாதி மகன் அரசியல்வாதி என்று ஒரு நாலு தலைமுறை போனால், ஒரு கையாலாகாத இனமும் நிரந்தரமாகத் தோன்றிவிடுமோ என்கிற அச்சம் எனக்கு.

அரசியல்வாதிகள் வெறும் பேச்சோடு விஷயத்தைக் கோட்டைவிட்டு விடுகிறார்கள் என்பதுதான் உண்மை.

கேள்வி : பின் வறுமையை எப்படிப் போக்கலாம்?

'நம் நாட்டில் உண்மையாக உழைக்கின்ற மனோ பாவம் இல்லாத வரை நமது உற்பத்தி பெருகாது, வறுமை நீங்காது, என்று பலர் சொல்கின்றனர். இது உண்மைதான். போதிய வேலைக்கு வாய்ப்புத் தராமல், உழைக்கின்ற மனோபாவம் இல்லை என்று கூறுவது நீதியாகாது.

வேலையில்லாத் திண்டாட்டம் ஒரு தனி மனிதனது வயிற்றில் மட்டும் அடிப்பதில்லை. அவனது தன்மானத்திலும் அடிக்கிறது. 'நான் திறமையற்றவன், அதிர்ஷ்டமற்றவன்' என்று அவனை எண்ணச் செய்து தனி மனிதனை அது தாழ்த்திச் சிறுமைப்படுத்துகிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க, மான்யம் கொடுப்பதில் கருத்துச் செலுத்துவதற்குப் பதிலாக; வறுமையைப் போக்க ஏழைகளுக்கு இலவச உணவு, துணி, பல்பொடி கொடுப்பதற்குப் பதிலாக நாம் வேலை வாய்ப்புகளை உருவாக்க வேண்டும்.

வேலைவாய்ப்புப் பெருக, நாட்டில் நாம் பெருந் தொழில்களையும் நடுத்தரத் தொழில்களையும் பெருக்க வேண்டும். கிராமங்களிலெல்லாம் சிறு தொழில்களையும், கைத்தொழில்களையும், கிராமத்துக் கச்சாப் பொருட் களைப் பயன்படுத்தும் குடிசைத் தொழில்களையும் நாம் நிறுவ வேண்டும். இப்படி நிறுவப்படுவதும், அரசாங்கத்திடமிருந்து வருவதற்குப் பதிலாக நாட்டின் பெருந்தனக்காரர்களிடமிருந்து — தொழிலதிபர்களிட மிருந்து—கிராமப் பெருமக்களிடமிருந்து—கிராமத்து இளைஞர்களிடமிருந்து — அனுபவசாலிகளிட மிருந்து வெளிவர வேண்டும். இதில் அரசாங்கம் காட்டும் ஈடு

பாட்டைவிட மக்கள் காட்டும் ஈடுபாடு அதிகமாக இருக்க வேண்டும்.

அரசாங்கம் இதில் கூட்டாளியாக இருக்கலாம். அப்படி இல்லையெனில் இடைஞ்சல் செய்யாதவர்களாக இருக்க வேண்டும். தொழில் லைசென்ஸ் பெறுவதற்குப் பணம், இடம் வழங்குவதில் லஞ்சம், மின்சாரம் வழங்குவதில் தாமதம், கச்சாப்பொருள் பெறுவதில் அரசாங்கத் தடைகள், உற்பத்தி செய்த பொருளுக்கு அரசாங்க விலை நிர்ணயம் என்ற நிலை இன்று நாட்டில் நிலவுகிறது. இத்தனை இடைஞ்சல்களா? ஒரு சுதந்திர நாட்டில்தான் நாம் வாழ்கிறோமா?

தொழிலுக்கு அரசாங்கம் உதவுகிறதா அல்லது தொழில் செய்ய முன்வருவோரின் குரல்வளையில் சுருக்குப்போட்டு அவர்களைக் கொலை செய்ய முயற்சிக்கிறதா என்பதுதான் இன்றைய பிரச்னை.

சொந்தக் காலில் நின்று தொழில் செய்வோர் சிறு இனம். ஒரு சிலருக்குத்தான் அதற்கு வேண்டிய ஆர்வமும், விடாமுயற்சியும், சளைக்காத மனமும் இருக்கிறது. அவர்கள்தான் சமுதாயத்துக்கு வேலை வாய்ப்பளித்து சமுதாயத்தின் மொத்த வருமானத்தைப் பெருக்குபவர்கள்.

பெரிய தொழிற்கூடங்களைவிட, சிறுதொழில்களின் மூலம்தான் அதிகப்படியான மக்கள் வேலைவாய்ப்பைப் பெறுகிறார்கள் என்று அமெரிக்காவில் கணக்கிடப்பட்டிருக்கிறது.

அந்தத் தொழில் செய்யும் தனி இனத்துக்கு நாம் ஊக்கம் தரவேண்டும். அவர்களைக் கண்டுகொள்ள வேண்டும்.

'வறுமை நீக்கப்படவேண்டும்' என்று வெறும் ஆசைப்படுவதாலோ, பேச்சாலோ, முழக்கங்களாலோ நீங்காது. வெறும் பேச்சையும் திட்டங்களையும் தாண்டி நாம் செயல்பட வேண்டும். செயல்களைக் கண் காணிக்கவேண்டும்; பலன்களைப் பெறும்வரை ஓயக் கூடாது. இன்று நமக்கு வேண்டுவது தெளிவு.

பின், **செயல்**, செயல், செயல்.

தம்பீ! இன்று நீ எங்கிருக்கிறாய் என்பதைப்பற்றிக் கவலைப்பட்டுப் பயனில்லை. இனி நீ என்ன செய்யப் போகிறாய் என்பதில்தான் உன் எதிர்காலம் அடங்கி இருக்கிறது. **செயல்படு! செயல்படு!! செயல்படு!!!**




## தேவை—நிலையற்ற ஆளுங்கட்சி!

ஒரு கூட்டத்தில், “நாட்டின் வருங்காலத்துக்கு யார் தலைமை நல்லது?” என்று ஒருவர் என்னைக் கேட்டார்.

நான் யோசித்தேன். உடனடியாக ஒரு தலைமை வந்துவிட்டால் நாட்டின் பிரச்னைகளும் அவலநிலைகளும் மாறிவிடுமா? விஷயம் இன்னும் ஆழத்தில் இருக்கிறது.

ராஜாஜி முதல்வராக இருந்தபோது அவர் நண்பர் ஒருவர், குறிப்பிட்ட ஜில்லாவில் உள்ள ஒரு கலெக்டர் வாங்கும் லஞ்சத்தை எல்லாம் குறிப்பிட்டு அவரை மாற்ற வேண்டுமென்று ராஜாஜிக்கு ஒரு கடிதம் எழுதினார்.

'அந்த கலெக்டரைத் தான் மாற்ற முடியாது' என்று பதில் எழுதினார் ராஜாஜி. அதற்கான காரணத்தையும் தந்தார். என்ன காரணம் அது?

"ஊழலையும் லஞ்சத்தையும் ஒரு ஜில்லாவிலிருந்து மற்றொரு ஜில்லாவுககு நான் மாற்ற விரும்பவில்லை. அந்த கலெக்டர்மீதுள்ள ஆதாரபூர்வமான குற்றச் சாட்டுக்களை அனுப்புங்கள். நாம் அவரை ஜெயிலுக்கு அனுப்புவோம்!" என்று எழுதியிருந்தார்.

இன்று இருப்பவர்களில் யார் பதவியேற்றாலும் ராஜாஜி கூறிய 'ஊழல் இடமாற்ற நிலை'தான் ஏற்படுமோ என்கிற சந்தேகம் எனக்கு!

நான் கேள்விக்குப் பதிலளிக்கத் துவங்கினேன்: "நமது மாநிலத்தில் அடுத்த ஐந்தாண்டுகளுக்கு ஆளுங்கட்சி மாறிக்கொண்டே இருக்கவேண்டும். அது தான் நாட்டுக்கு நல்லது!" என்றேன் நான்.

கூட்டத்தில் ஓர் அசாதாரண அமைதி நிலவியது.

பதவி நிரந்தரத்தினால் ஏற்படுகிற சர்வாதிகார மனப்போக்கும் ஆணவமும்தான் இன்றைய ஊழலுக்கும் லஞ்சத்துக்கும் மூலகாரணங்கள். ஆகவே, ஆளுங்கட்சி அடிக்கடி மாறிக்கொண்டே இருக்குமானால் எந்தக் கட்சியும் ஆட்சிக்குப் பாரம்பரியம் கொண்டாட முடியாது.

ஆட்சி மாறிக்கொண்டே இருக்கும்போது, அமைச்சர்களுக்கு ஆணவம் ஏற்படாது; அதிகாரப் போதை தலைக்கேறாது. 'ஊருக்கு நல்லது செய்ய மக்கள் ஒரு வாய்ப்பளித்திருக்கிறார்கள். பதவி என்றும் பறிபோய்விடும். அதற்குள் ஏதாவது நல்லது செய்ய முடியுமா?' என்று எண்ணத் துவங்குவார்கள்.

நிர்வாகத்தில் இருக்கும் அதிகாரிகளும், 'இந்த அமைச்சரவை எத்தனை நாள் பதவியிலிருக்குமோ தெரியாது...அமைச்சர்கள் சொல்வதைக் கேட்டுத் தவறான காரியங்களைச் செய்து மாட்டிக்கொள்ள நான் தயாராயில்லை!' என்று எண்ணத் துவங்குவார்கள்.

பொதுமக்களும், 'இந்த அமைச்சருக்கு லஞ்சம் கொடுப்பதில் லாபமில்லை. இவர் எத்தனை நாளைக்குப் பதவியிலிருப்பார் என்பது தெரியாது. இவர் முடிவை அடுத்து வருபவர் மாற்றமாட்டார் என்பது என்ன நிச்சயம்?' என்று எண்ணத் துவங்குவார்கள்.

அமைச்சர்களும் 'இன்று லஞ்சம் கொடுப்பவர்கள், நாளை நமது பதவி பறிபோனபின் நம்மைக் காட்டிக் கொடுக்கமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? நாளை நமக்கு எதிராக சாட்சி சொல்லமாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்? அடுத்து வரும் ஆட்சி நமது லஞ்ச ஊழலை விசாரிக்க கமிஷன் நியமித்து நம்மை உள்ளே தள்ளாது என்பது என்ன நிச்சயம்?' என்று எண்ணிப் பார்ப்பார்கள்.

அமைச்சரவை நிரந்தரமில்லாதபோது நிர்வாக அதிகாரிகளும் காவல்துறையும் எது நியாயமோ அதை மட்டுமே செய்வார்கள். நீதிமன்றமும் ஒரு சுதந்திரச் சூழ்நிலையில் இயங்கும். தனிமனித வழிபாடு குறையும்.

மக்களுக்குப் பயம் விட்டுப்போகும். மிக முக்கியமாக, நிர்வாகிகளுக்கும் அதிகாரிகளுக்கும் பயம் விட்டுப் போகும்.

கும்பகோணம் கல்லூரியில் பணிபுரிந்த கல்யாண மய்யர் சொன்ன விஷயம் என் நினைவுக்கு வருகிறது.

அனாவசியமான ஊழல் குற்றச்சாட்டுக்களை நம்பி, கல்லூரி பிரின்ஸிபால் ஒரு நாள் அவரைக் கூப்பிட்டனுப் பினார். கோபமாக அவரைப் பார்த்துக் கேட்டார்: "எத்தனை காலமாக இந்தக் கல்லூரியில் வேலை பார்க்கிறீர்?"

கல்யாணமய்யர் அடக்கத்துடன் பதில் கூறினார்: "நான் பார்க்கும் பதினேழாவது பிரின்ஸிபால் நீங்கள் சார்?" என்று மரியாதையுடன்!

அரசாங்க நிர்வாகிகளும், காவல் துறையினரும் இதை நினைத்துப் பார்க்க வேண்டும்.

நிர்வாகிகளும் காவல்துறையும் நீதிமன்றமும் நியாயத்துக்குத்தான் பயப்படவேண்டும்; அமைச்சர் களின் பயமுறுத்தல்களுக்கல்ல. அமைச்சர்களின் ஆதரவுக்கு அல்ல.

நாட்டு நலனுக்காகத்தான் அதிகாரிகளும் காவல் துறையும் நீதிமன்றத்து மனிதர்களும் நியமிக்கப்பட்டிருக் கிறார்கள். அவர்கள் எடுபிடி ஆட்களல்ல; அவர்கள் அமைச்சர்களின் சொந்தக் கம்பெனியில் வேலை செய்பவர்களல்ல. காலைத்தொட்டுக் கும்பிடத் தேவை இல்லை. மக்கள் படி அளக்கிறார்களே தவிர, அமைச்சர் கள் அல்ல.

இப்படித்தான் பிரெஞ்சு நாட்டில் டிகால் ஜனாதிபதி யாக வருவதற்குமுன் ஒரு ஸ்திரமற்ற தன்மை இருந்தது. இதனால் பிரெஞ்சு மக்களின் ஜனநாயகம் பறிபோக வில்லை. ஒரு சாதாரணக் குடிமகன்கூட 'என்ன நடக் கிறது நாட்டில்?' என்று அக்கறைகொண்டான். தன் கருத்தைப் பகிர்ந்துகொண்டான்.

தன் மூலம் பொதுமக்களின் ஈடுபாடு அதிக மாகியது. இது ஜனநாயகத்துக்கு வெற்றியாக அமைந்

தது. சிறிது கால ஸ்திரமற்ற தன்மைக்குப்பின் பிரெஞ்சு நாட்டில் டிகால் என்ற வலுபடைத்த மனிதர் தலைமை ஏற்றார்.

ஆளுங்கட்சியின் நிலையற்ற தன்மை மக்கள் மனத்தில் ஒரு மகத்தான மாற்றத்தை உண்டுபண்ணும். அதிகாரிகள் மனத்திலும், ஆட்சிபுரிவோர் மனத்திலும் ஒரு மகத்தான மாற்றத்தை உண்டுபண்ணும்.

'நாட்டின் நிலைமை மாறாது; மாற்ற முடியாது!' என்ற அவலம் நிறைந்த பேச்சை இன்று நாடெங்கும் கேட்கிறோம். இது நல்லதல்ல. எந்த ஒரு சோதனையும் நாட்டில் நிரந்தரமாக நிலைத்ததில்லை. எத்தனையோ சம்பவங்கள் புதிதாக ஏற்பட்டு, சரித்திரத்தின் திசையையே மாற்றுகின்றன.

இது திசைமாற வேண்டிய நேரம்.

பொதுமக்களாகிய நாம்—நியாய உணர்வு பெற்றவர்களாகிய நாம்—ஒதுங்கி இருந்ததனால் ஏற்பட்ட வினை இன்றைய அரசியல் நிலை. பொதுமக்களும் அதிகாரிகளும் பயந்து செயல்பட்டதால் வந்த வினை இன்றைய அரசியல் நிலை.

ஒத்த உள்ளம் உடையவர்கள் எல்லாம் ஒன்றாக அங்கங்கே சிறு சிறு அமைப்புகளாகச் செயல்படும்போது நமது ஒற்றுமை வலிமை தருகிறது...'இது நமது நாடு! இது புரையோட இனியும் அனுமதிக்கக்கூடாது!' என்று ஒத்த உள்ளம் உடையோரின் சங்கங்கள் எல்லாம் சங்கற்பித்துக் கொள்ளும்போது நாட்டின் தலைவிதி மாறுகிறது.

'நாம் வாழும் பகுதிகளை எந்த நல்ல முறையில் சுகாதாரமாக வைத்துக்கொள்வோம்!' என்பதிலிருந்து

'நாம் வாழும் தாலுகாவுக்கு மாவட்டத்துக்கு வேலை வாய்ப்பும், தொழில் வாய்ப்பும் ஏற்பட என்ன செய்ய வேண்டும்?' என நாம் சிந்திக்க வேண்டும். இதன் விளைவாக, நாம் செய்யும் சிறு செயல்கள்கூட நமக்கு மகத்தான தெம்பைக் கொடுக்கும். ஜனநாயகம் நடைமுறையில் உலவுவதை—நாம் உலவ வைப்பதைஉணர்வோம்.

தம்பீ! நாம் மனம் வைத்தால் இது நம்மால் முடியும்.

தமிழனின் அறிவும் திறமையும் எந்த மாநிலத்தாருக்கும் எந்தநாட்டாருக்கும் சளைத்ததல்ல; இளைத்ததல்ல.

துணிவும் தியாகமும்தான் தேவை.

தம்பீ, களத்தில் இறங்கு.

# 18

## இன்றைய அரசியல் பண்பாடு...

தமிழ்க் கலாசாரம், பண்பாடு என்று சொல்லிக் கொண்டு கேவலமான மனோபாவங்களையும் கீழ்த்தர மான எண்ணங்களையும் பழக்கவழக்கங்களையும் அரசியல்வாதிகள் சிலர் பரப்பிவருகின்றனர்.

பாரதியார் இருந்திருந்தால் இவற்றைக் கீழ் மக்களின் பண்பு என்று சாடியிருப்பார். இந்த அரசியல் வாதிகளும் அவர்களைப் பாராட்டிப் பலன் பெறுபவர் களும் இக் காரியங்களைச் செய்கிறார்கள்.

யார் இந்தக் கீழ்மக்கள்?

நீதியை மதிக்காதவர்கள்; தன்னைச் சார்ந்த சமுதாயத்திடம் அன்பு இல்லாதவர்கள்; உயர்ந்த மதி இல்லாதவர்கள்; கல்வி இல்லாதவர்கள்.

இவர்கள் எப்படி இன்றைய அரசியல் வானில் இடம் பிடித்துக் கொண்டார்கள் என்று நீங்கள் கேட்கலாம்.

ஒருவகையான எண்ணங்கொண்டவர்கள் அதே வகையான கருத்துக்கொண்டவர்களைத் தேடுவது, அரவணைப்பது, பாராட்டுவது, தன் கட்சிக்காரன் என்று மார்தட்டிக்கொள்வது உலக இயல்பு.

பிற நாடுகளிலும் கட்சிகள் இருக்கின்றன. அமெரிக்காவிலும் சரி, பிரிட்டனிலும் சரி, ஜப்பானிலும் சரி, சிங்கப்பூரிலும் சரி; இவர்கள் தீவிரவாதிகள் என்றும் மிதவாதிகள் என்றும்தான் இவர்களை இனம் பிரிக்க லாம். இவர்களை (Liberals) பரந்த மனப்பான்மை கொண்டவர்கள் என்றும் அல்லது குறுகிய பத்தாம்பசலி மனோபாவம் கொண்டவர்கள் (Conservatives) என்றும் இனம் பிரித்துப் பேசுவார்கள்; எழுதுவார்கள். மற்றபடி அடிப்படையில் இரு கட்சியினரும் நேர்மையில் குறைந்த வர்களல்ல; நீதியை மதிக்காதவர்கள் அல்ல; நாட்டின் பால் அக்கறை இல்லாத சுயநலமிகள் அல்ல, அதாவது, மனிதனது அடிப்படை நெறிகளில் தாழ்ந்தவர்கள் அல்ல அவர்கள். அப்படி ஓரிருவர் அரசியல் வானில் தோன்றினாலும், உடனே கிள்ளியெறியப்படுவார்கள் மேனாடுகளில். நிக்சன் அப்படித்தான் தூக்கியெறியப் பட்டார். புரொபுயூமோ என்ற ஒரு பிரிட்டனின் பாது காப்பு மந்திரி, ஒரு விலைமாதுடன் தொடர்பு கொண் டிருந்தார். இவள் முலம் நாட்டு ரகசியங்கள் போயிருக்கக் கூடும் என்ற சந்தேகம் எழுந்தபோது, புரொபுயூமோ

தானே விலகிக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

அவர்களிடம் தன்மானம் இருந்தது. அவர்களது அரசியல் பாரம்பரியத்தில் அத்தகைய நெறிகள் மதிக்கப்பட்டன. 'மூன்று கோடி லஞ்சப் பணம் என்னாயிற்று?' என்று நமது நாட்டில் ஒரு கட்சி கேட்கும்போது 'நீங்கள் பத்துகோடி வசூலித்தது என்னாயிற்று...?' என்று திருப்பிக் கேட்கிறார்களேயொழிய, 'தாங்கள் லஞ்சம் வாங்கவில்லை' என்று கூறவில்லை. "நான் திருடன்தான் ஆனால், நீ பெரிய திருடன்!" என்று இன்றைய அரசியல் வாதிகள்—பதவியிலிருப்போர் கூறாமல் கூறுகிறார்கள்.

அதாவது லஞ்சத்தை, ஊழலை, நேர்மையின்மையை ஏற்றுக்கொண்ட நிலை.

மீண்டும் பழைய கேள்விக்கு வருவோம்.

பொதுவாகவே, நம் நாட்டில் எப்படி வெற்றிகரமாகக் கயவர்கள் அரசியல் வானில் இடம் பெற்றார்கள்?

நேர்மையில்லாதவர்களாக—நேர்மையில் நம்பிக்கை இல்லாதவர்களாக—பதவியின் அதிகாரத்தை வைத்துக்கொண்டு எதையும் சாதித்துக்கொள்ளலாம் என்று புறப்பட்டவர்கள்தானா நம் தலைவர்கள்?

ஆம்! அப்படித்தான் தோன்றுகிறது; அப்படித்தான் இருக்கிறது.

சுயலாபத்துக்காக—சுயசகாயத்துக்காக நேர்மையற்ற செயல்களைச் செய்யச் சிறிதும் தயங்காத ஒரு கும்பலின் கையில் அரசியல் சிக்கிவிட்டது.

நாட்டு மக்கள் விவரம் புரியாது பார்த்துக் கொண்டிருக்கின்றனர். விவரம் புரிந்தவர்களும் பார்த்துக்

கொண்டுதான் இருக்கின்றனர். மனம் உடைந்து பேசு கின்றனர். "என் செய்வேன் இறைவா! கச்சி ஏகம்பனே!" என்று புலம்புகின்றனர்.

"அடிப்படையில் நாணயம் உள்ளவர்களா அல்லது நாணயம் இல்லாதவர்களா?..." என்று எப்படி நாம் ஒரு தலைவனைத் தேர்ந்தெடுப்பது...? இது கஷ்டமான காரியம்தான். ஏனெனில், பதவிக்கு வருமுன் பலரும் வேஷம் போடுகின்றனர். வேஷங்களை நம்பியதனால் வந்த வினைதான் இது. தமிழ்நாட்டுப் பொது வாழ்வில் வேஷதாரிகள் புகுந்துவிட்டனர்.

தம்பீ! நெறி கடந்த நிலையில் இன்று நாம் இருக்கிறோம். குறிப்பாகத் தமிழ்நாடு இருக்கிறது.

அவர்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான தலைவன் மறைந்துவிட்ட நிலையில், கிராமத்து மக்கள்கூடப் புரிந்துகொண்டு விட்டார்கள்!

காசுக்காகப் பிரதிநிதிகள் கட்சி மாறுகிறார்கள். சுயலாபத்துக்காக ஒரு தலைமை அணியில் கூடு கின்றனர். இவர்களை வைத்துத் தனது பணம், பதவி, புகழ் என்ற தாகத்தைத் தீர்த்துக்கொள்ளத் தலைமை யை நாடுகின்றனர் சிலர்.

கட்சி மாறிகளுக்குக் கொடுக்கப்படும் 'வாய் பூட்டு' லஞ்ச லட்சங்கள் எங்கிருந்து வருகிறதென்று யோசித்துப் பார். ஏழை மக்கள் கொடுக்கிறார்களே வரி—துணிக் கும், உப்புக்கும், தீப்பெட்டிக்கும், சுருட்டு பீடிக்கும், சினிமாவுக்கும்—அதிலிருந்து வரும் மொத்த வரிப் பணத்தை இவர்கள் தங்கள் கட்சிக்காரர்களுக்கு விநியோகிக்கிறார்கள். இது ஏழை மக்களின் வரிப் பணம்.

தம்பீ! ‘இது அல்ல நாட்டின் உண்மை நிலை; நீங்கள் எழுதுவது பொய்’ என்று சத்தியம் செய்ய முடியுமா? முடியாது!

இந்நிலையில் நாம் என்ன செய்யவேண்டும்...?

என்ன செய்யவேண்டும் என இதுவரை நிறைய எழுதிவிட்டேன். இதையெல்லாம் நீ எண்ணிப் பார்! சிந்தி! கொஞ்சம் பொருமு! உன்னொத்த நண்பர்களுடனும், கிராம மக்களுடனும் விவாதி! எடுத்துக் கூறு! மேடை ஏறு! மேடை ஏற்று! மக்களை விழிப்புணர்வு பெறச் செய் முதலில்.




## முன்னோடிகள் தேவை...

நமக்கு முன்னே இரண்டு விஷயங்கள் இருக்கின்றன. ஒன்று: நம்மால் ஏதும் முடியாது என்று சொல்லிவிட்டு ஒரு விரக்தியுடன் 'ஏதாவது அதிசயம் நிகழாதா? இந்த நாட்டின் தலைவிதி மாறாதா? ஆண்டவன் தோன்ற மாட்டாரா?' என்று எதிர்பார்த்துக்கொண்டு உட்கார்ந் திருப்பது.

இரண்டாவது: 'எனது விதி என் கையில். எனது வாழ்வும் மகிழ்ச்சியும் என் கையில். இது எனது நாடு. இந்த நாட்டின் நலிவை நிறுத்துவேன். அதற்காகக் குரல் கொடுப்பேன்; தோள் கொடுப்பேன். நியாயத்

துக்காக, சத்தியத்துக்காகப் போராடுவேன். சத்தியம் வெல்லும்: நியாயம் வெல்லும்!' என்று எண்ணுவது, செயல்படுவது.

முடியாது என்று எண்ணும்போது மனக்கதவைச் சாத்திவிடுகிறோம். 'முடியும் போலிருக்கிறதே' என்று ஒரு சிறிய நம்பிக்கையை உள்ளே விடும்போது கதவு திறக்கிறது. ஓராயிரம் வழிகள் தோன்றுகின்றன.

பலர் சொல்கிறார்கள்:

"லெனின் மாதிரி ஒரு ஆள் வேணுங்க நம் நாட்டுக்கு" என்று.

"காந்தி இருந்தபோது பார்த்தீங்களா? எல்லாரும் ஒரு லட்சியத்தால் தொடப்பட்டார்கள். காந்தி மாதிரி ஒரு ஆள் இப்ப வேணும்!"

"நாட்டிலே தூய்மை செத்துப்போச்சு."

"லஞ்சமா? கொடுத்திடு. அக்குறும்பா? கண்டுக்காதே!' இப்படித்தானுங்களே போவுது. ஜனங்களுக்குத் துணிச்சல் இல்லாம போச்சே. எல்லாரும் பயந்து சாவுறாங்களே..."

"மிலிட்டரி ரூல்தான் நம்ம ஊருக்கு லாயக்கு. இந்தக் கட்சிக்காரனுவளை எல்லாம் இத்தினி நாள் விட்டு வெச்சிருப்பானா? ஜெயிலுக்குள்ளே போட்டிருப்பானுங்க! நம்ம ஜனங்க, ஜனநாயகத்தைப் புரிஞ்சுக்காத ஜனங்க. ஜனநாயகம் நமக்கு லாயக்கில்லே. அதெல்லாம் படிச்ச நாட்டிலேதான் ஒர்க் பண்ணும்!"

—இப்படிக் கிராமத்து மக்கள் பேசிக்கொண்டிருந்த போது ஒன்று புரிந்தது. பொதுமக்கள் நாட்டு நிலைமை

பற்றி மிகவும் அக்கறைப்படுகிறார்கள். 'இதற்கு விடிவே இல்லை' என்று எண்ணுகிறார்கள் என்கிற விஷயம்.

ஒரு பத்து ஆண்டுகளுக்கு முன் நமது ஊர் கிராம மக்களை ஒரு சர்வே செய்தார்கள். அவர்கள் அபிப்பிரா யங்களை—எண்ணங்களைக் கேட்டார்கள். நாடு இன்று எப்படி இருக்கிறது என்றும், நாட்டின் எதிர்காலம் எப்படி இருக்குமென்றும். "இன்றைய நிலைமை கஷ்டம்தான், இருந்தாலும் என் பிள்ளைகள் ரொம்ப நல்லா வாழ்வாங்கன்னு நம்பிக்கை இருக்கிறது. பிள்ளை களெல்லாம் படிக்குது" என்றார்கள். இதை அடிப்படை யாக வைத்து நாட்டின் எதிர்காலம் சிறப்பாக—வளர்ச்சி பெற்றதாக—இருக்கும் என்று அறிஞர்கள் அனுமானித் தார்கள்.

ஆனால், இன்றைய நிலையைப் பற்றிய மக்கள் அபிப்பிராயம் "நாடு இப்படியே போனால் எதிர்காலம் இன்னும் மோசமாக இருக்கும்!" என்கிற எண்ணங்கள் மிகவும் பரவலாகிப் போயிருக்கிறது.

எதை எதிர்பார்க்கிறோமோ அதுதான் நிகழும். இது ஒரு மனோதத்துவ உண்மை. இதை ஆங்கிலத்தில் (Self fulfilling prophecy) 'நாம் சொல்வதை நாமே நிறைவேற்றி வைப்போம்' என்ற வாசகமாக அடிக்கடி கூறுவார்கள்.

இது நல்லதல்ல.

நமது மனோபாவம் மாறவேண்டும். மாற்றப்பட வேண்டும். நம் கண்ணெதிரே நமது சமுதாயம் நலி வடைய, நம்பிக்கை இழக்க நாம் விடக்கூடாது.

ஒரு சமுதாயம் என்பது ஒரு குறிப்பிட்ட மக்களின் கூட்டம். எந்தக் காரியத்தை எடுத்தாலும் மக்கள்

கூட்டத்தின் ஒரு குறிப்பிட்ட சிலரே அதற்கு முன்னோடியாக இருந்து நல்லது, கெட்டதைச் சொல்லவும், செய்யவும் முன்வருவார்கள். இவர்கள்தான் முன்னோடிகள். ஒரு கிராமத்தில் மக்கள் தொகை இரண்டாயிரமாக இருந்தாலும், அங்கே ஓரிரு நற்பணி மன்றங்கள்தான் இருக்கின்றன. அங்கே ஒரு பதினைந்து அல்லது இருபது அங்கத்தினர்களே இருக்கக்கூடும். அவர்கள்தான் முன்னின்று நல்லவர்களை அழைத்துப் பேசச் சொல்கிறார்கள். அவர்கள்தான் ஊருக்கு மருத்துவ வசதி செய்ய முற்படுகிறார்கள். அவர்கள்தான் குடிநீர், சுகாதாரம் பற்றியும், சாலை பள்ளம் படுகுழி பற்றியும், தேவையான பஸ் நிலையங்கள் பற்றியும் அக்கறை எடுத்துக்கொண்டு செய்கின்றனர்.

அதாவது, அக்கறையுள்ள ஒரு சிலராலேயே பல நல்ல காரியங்கள்—அது கிராமமானாலும் சரி, அது பெரிய அரசாங்கமானாலும் சரி; நடைபெறுகின்றன.

அந்த ஒரு சிலரின் மனோபாவம் எப்படியிருக்கிறது? நல்லெண்ணங்களால் நிரம்பி இருக்கிறது. முடியும் என்ற நம்பிக்கையால் நிறைந்திருக்கிறது. இவர்களது எண்ணங்களும் செயல்களுமே நிறைவேறிய நல்ல காரியங்களாகக் கிராமத்தில் மலர்கின்றன.

எல்லோரும் சொல்வதுபோல நாம் ஒரு காந்தியை மீண்டும் பிறக்கச் செய்ய முடியாது. ஒரு லெனினை நாம் அழைத்துவர முடியாது. ஒரு சர்தார் வல்லபாய் படேலோ, ஒரு காமராஜரோ வேண்டும் என்று அங்கலாய்த்துக்கொண்டிருப்பதில் அர்த்தமில்லை.

இவர்கள் நம்மிடையே இருந்தால் என்ன செய்வார்களோ, அதை நாமே செய்யவேண்டும்.

இவர்கள் என்ன செய்திருப்பார்கள்?

மக்களுக்கு நம்பிக்கை ஊட்டியிருப்பார்கள். தைரியம் கொடுத்திருப்பார்கள். தியாகத்துக்கு வழி காட்டியாக நின்று நமக்கு உதவியிருப்பார்கள். அநியாய வரியை எதிர்த்து மகாத்மா காந்தி உப்புச் சத்தியாக் கிரகப் போராட்டம் நடத்தியதுபோல, இன்று ஊழலுக் கெதிராகப் போராட்டம் நடத்தியிருப்பார்கள்.

நாம் இன்று அதைத்தான் செய்ய முன்வர வேண்டும். அவர்கள் நம்முடன் இருந்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்று யோசித்துப் பார்த்தால் போதும். நமக்கு வழி கிடைத்துவிடும், தைரியம் பிறந்துவிடும்.

பிரச்னை வெகு கஷ்டமாக இருக்கும்போது அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ரிச்சர்டு நிக்ஸன், பழைய ஜனாதிபதிகளின் படம் மாட்டியிருக்கும் அறைக் குள் செல்வாராம், அவர்களுடன் பேசுவாராம்.

என்ன நேர்கிறது என்பதை எண்ணிப் பாருங்கள்! இதன் விளைவாக நமக்குள் ஒரு மாற்றம்—ஒரு மகத் தான மாற்றம் நிகழ்கிறது, ஒரு நம்பிக்கை பிறக்கிறது, ஒரு தெளிவு பிறக்கிறது, ஒரு திட்டம் பிறக்கிறது, நமக் குள் ஓர் உள்வலிமை உருவாகிறது.

உலக அதிசயங்களெல்லாம் இப்படித் தனி மனிதனின் மனத்தில் தோன்றிய மன வலிமையினால் விளைந்தவைதான்.

தோரோ என்ற அமெரிக்க அறிஞன், "மெக்ஸிகோ வுக்கு எதிராக அமெரிக்கா நடத்திய போர் நியாய மற்றது" என்று கூறி, வரி கொடா இயக்கம் நடத் தினான்—தனி மனிதனாக. பின், "அதிகாரத்துக்குப் பணியவேண்டிய அவசியம் இல்லை" என்ற தலைப்பில்

(Non-Obedience Movement) ஒரு புத்தகம் எழுதினான். ஒரு தனி மனிதனது மனவலிமையைக் கவனியுங்கள்! பின்னால் இதை முன் வைத்துத்தான் காந்தி தன் ஒத்துழையாமை இயக்கத்தை நிறுவினார். காந்தியின் மனவலிமையை எண்ணிப் பாருங்கள்.

வேறு ஓர் உதாரணத்தைச் சொல்ல வேண்டுமானால், கபில்தேவ் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தபோது அவரை விட்டுவிட்டு மற்ற மாணவர்களை கிரிக்கெட் பயிற்சி முகாமுக்குப் பள்ளி ஆசிரியர்கள் அழைத்துச் செல்கின்றனர். இது, அந்த இளைஞனின் மனத்தில் ஒரு மாற்றத்தை—வேகத்தை உண்டு பண்ணியது. இதன் விளைவாக 'செய்து காட்டுகிறேன் பார்!' என்ற சபதத்தை மேற்கொள்கிறான். சின்னஞ் சிறு பள்ளி மாணவர்களை வைத்துக்கொண்டு அந்தக் கோடை விடுமுறை முழுவதிலும் கிரிக்கெட் விளையாடுகிறான். கபில்தேவின் திறமையைக் கண்டு ஆசிரியர்கள் வியக்கிறார்கள். கபில்தேவின் மனத்தில் எழுந்த மனவலிமையைக் கவனியுங்கள்.

எந்தத் துறையில் புக விரும்பினாலும் சரி, நாம் நம் உள் வலிமையை வளர்த்துக்கொள்ள வேண்டும். தியானங்களாலும், விரதங்கள் மூலமும், நோன்புகள் மூலமும் பலர் தங்கள் உள்வலிமையை வளர்த்துக்கொள்கிறார்கள்.

இங்கே வஞ்சமில்லை; பொய்யில்லை; பொறாமையில்லை. "ஊர் நலம் பெற, மக்கள் நல்வாழ்வு வாழ நான் என்ன செய்கிறேன் பார்!" என்று ஒரு சிலர் எழுந்தால் போதும்; உள் வலிமை கொண்டால் போதும்.

ஒரு மனிதன் பேசும் சத்திய வாக்கு எதிரிகளாய் நிற்கும் தொண்ணூற்றொன்பது பேரையும் நிலைதடு மாறச் செய்யும். சத்தியம் அத்தனை வலிமை படைத்தது; அத்தனை பயங்கர சக்தி கொண்டது, இது உண்மை.

இந்த நாட்டில் சத்தியம் மீண்டும் நிலைக்க ஒரு சிலர் எழுந்து நின்றால் போதும். உறுதி கொண்டால் போதும்.

ஊழலும் லஞ்சமும், நெறி பிறழ்ந்த அதிகாரமும் தூள், தம்பி, தூள்!




## வன்முறைகளுக்கு முடிவுகட்ட ஒரு வழி

**நா**ட்டில் வன்முறை மலிந்துவிட்டது. அராஜகம் தலைதூக்கி நிற்கிறது. அடிதடி மூலம் தான் விரும்பியதைச் சாதித்துக்கொள்ளலாம் என்ற துணிவு பரவி வருகிறது. அடியாட்கள் அரசியல்வாதிகள் என்ற போர்வையில் உலவுகிறார்கள். இதன் உச்சகட்டம்தான், சட்டசபையில் நடைபெற்ற நிகழ்ச்சி! தமிழகத்தின் ஜனநாயக வரலாற்றிலே பெரும் கறை; நமது ஜனநாயக பாரம்பரியத்துக்கே இழுக்கு.

அப்போதெல்லாம் சட்டசபைத் தலைவரும், ஆளுங் கட்சித் தலைவரும் என்ன செய்தார்கள்? கண்டித்தார்களா, அவர்களைத் தண்டித்தார்களா? இல்லையே...!

தவறுகளுக்கும், அநியாயங்களுக்கும், பண்பற்ற செயல்களுக்கும் தூபம் போட்டார்கள். அந்தப் புகை மூட்டம் இன்று நாட்டையே மூச்சுத் திணறச் செய்கிறது.

இதைவிட நாம் கவனிக்க வேண்டிய மிக முக்கிய மான விஷயம் ஒன்றிருக்கிறது.

'அடிப்படையில் இவர்கள் யார்?' என்ற கேள்வி தான் அது. உயர் பண்புகள் கொண்ட மனிதர் என்றால் பெருந்தன்மை காட்டுவான்; விட்டுக் கொடுப்பான்; ஒதுங்கிப் போவான்.

பண்பற்ற கீழ்த்தர மக்கள், தங்கள் கீழ்த்தர குணத்தைத்தான் காட்டுவார்கள். குழாயடிச் சண்டை யைவிடக் கேவலமாக இங்கே நடக்கிறது என்றால் என்ன அர்த்தம்? குழாயடிச் சண்டை போடும் கீழ்த்தர மக்களைவிடக் கீழ்த்தரமானவர்களை நாம் தேர்ந் தெடுத்திருக்கிறோம் என்றுதான் பொருள்.

இதைவிட முக்கியமான ஒன்றை நாம் உணர வேண்டும். இத்தகைய பிரதிநிதிகளை, கட்சி என்கிற பெயரில் தேர்ந்தெடுத்து நிறுத்துகிறாரே தலைவர், அவர் எதனால் இப்படிச் செய்தார்? என்ன காரணத் தினால் இப்படிச் செயல்பட்டார் என்று நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். காக்கை, காக்கை இனத்தைத்தான் உண்ண அழைக்கிறது. ஓநாய்கள் பிற ஓநாய்களுடன் தான் ஒரு காட்டெருமையைக் கொன்று குதறுகின்றன. இதுதான் அந்த மகத்தான உண்மை.

ஓர் உயர்வு மனிதன் தன்னிலைக்கு எல்லோரையும் உயர்த்துகிறான். மிகவும் படிக்காத பாமர மக்கள் அதிகம் இருந்த அந்தக் காலத்தில் மகாத்மா காந்தி தன் நிலைக்கு எல்லோரையும் உயர்த்தினார்.

தியாகமும், தன்னலமற்ற சேவையும், உயர் பண்புகளும் நாட்டில் பரவி நின்றன.

கொஞ்சம் யோசித்துப் பார்க்க வேண்டும் நாம். கடந்த இருபதாண்டுகளில், படித்தவர்களையும் பண்புள்ளவர்களையும் உயர்குடி மக்களையும் நம் தலைவர்கள் அவர்கள் நிலைக்குத் தாழ்த்தியிருக்கிறார்கள். பிறர் தன் காலைத் தொட்டு வணங்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதும், எதிர்த்துப் பேசுபவர்களை அடிக்கும் குணமும் கொண்ட நம் தலைவர்கள் எந்த மட்டத்திலிருந்து வருகிறார்கள் என்பதை எண்ணிப் பாருங்கள்.

நல்லவர்களாலும், நல்ல எண்ணங்களாலும், செயல்களாலும்தான் ஒரு நாடு முன்னேற முடியுமே யொழிய, சுயநலமிகளால் அல்ல; கட்சி என்ற பெயரில் நாட்டைக் கொள்ளயடிக்கும் நீதியும் நெறிமுறையும் அற்றவர்களால் அல்ல. நாடு ஏன் நலிந்து கீழே போய்க் கொண்டிருக்கிறது என்பதற்கு—கைப்புண்ணுக்குக் கண்ணாடியா வேண்டும்? பண்புள்ளவர்களுக்குப் பஞ்சம் வந்துவிட்டதுதான் காரணம்.

கொஞ்சம் பின்னோக்கிப் பாருங்கள். "லட்சியம் ஐந்து படி; அளப்போம் மூன்று படி; இல்லாவிட்டால் முச்சந்தியில் எங்களைச் சவுக்கால் அடி!" என்று எதுகை மோனையுடன் முழங்கினார் திரு. சி. என். அண்ணாதுரை. மக்களின் பேராதரவுடன் ஜெயித்து ஆட்சிக்கு வந்தார்.

ரூபாய்க்கு மூன்று படி அவர்கள் கொடுக்கவில்லை... யாரும் அவர்களை முச்சந்தியில் சவுக்கால் அடிக்க வில்லை. 'ஏதோ ஒரு நல்ல மாறுதல் வருகிறது!' என்று நம்பியது இளைஞர் உலகம்; தமிழ் உலகம்.

அவர் நல்லவர்...! மாறுதல் வந்ததென்னவோ உண்மைதான். ஆனால் அண்ணா இரண்டாண்டு காலத்திலேயே இறந்துபோனார். அதன்பிறகு திராவிட பாரம்பரியம், தான் சொன்ன லட்சியங்களை லவலேசமும் காப்பாற்றவில்லை. கடந்த, இருபதாண்டு களில் தமிழகம் என்றுமில்லாத அளவுக்குப் பொருளாதாரத் துறையில் மட்டுமல்ல தாழ்ந்து போனது; நமது கலாசாரங்களில், நமது பண்பாடுகளில், நமது பொதுவாழ்வைக் கையாளுவதில்...நாம் மிகமிகத் தாழ்ந்துபோய்விட்டோம்.

'நம் நாடு முன்னேற வேண்டும், ஏழை எளிய மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும். நல்ல தொழில்கள் ஏற்பட வேண்டும், நல்ல பாரம்பரியம் உருவாக வேண்டும்' என்ற லட்சியங்களெல்லாம் போய், 'நான் எப்படிப் பதவியில் இருக்க முடியும்; நிரந்தரமாக இருக்க முடியும்? எவ்வளவு பணத்தைக் கட்சிக்காரனுக்குக் கொடுத்தால் அவன் நம்மை ஆதரிப்பான்? எவ்வளவு பணத்தை நானும் கட்சிக்காரனும் லஞ்சமாக வாங்க முனைந்தால் தேர்தலின்போது செலவழிக்கலாம்? என்று எண்ணினார்கள்.

லட்சியமில்லாதவர்கள்.
லட்சியங்களை மாற்றிக்கொண்டவர்கள்.
சுயநலமும், பணமும், பதவியும், புகழுமே
பெரிதென மதித்தவர்கள்.

நம்பமுடிவில்லை; தமிழகத்துக்கு இப்படியொரு கதி வருமென்று. நினைத்துப்பார்க்க முடியவில்லை; நம்மை நம்பவைத்த நமது தலைவர்கள் இப்படிக் கீழிறங்கி, நாட்டையும் கீழே இறக்கிவிடுவார்கள் என்று.

நாம் எப்படித் தேர்ந்தெடுத்தோம் நம் தலைவர் களை? 'அதோ, கூரை மீதேறிக் கொள்ளிக்கட்டையைச்

சுழற்றுகிறானே, அந்தப் பிள்ளையே நல்ல பிள்ளை' என்ற பழமொழிக்கேற்பத் தேர்ந்தெடுத்தோம்.

இது நமது கடந்த காலம்.

இன்று—இனி ஒரு விதி செய்வோம்; செய்தாக வேண்டும் நாம். தம்பீ!

தோட்டத்தில் நல்ல விதைகளைப் போட்டால் மாத்திரம் போதாது, கூடவே வளரும், வளர்ந்திருக்கும் புல்லையும் புல்லுருவியையும், பூண்டுகளையும், நச்சுச் செடிகளையும் நாம் அகற்ற வேண்டும்; களை எடுக்க வேண்டும்; அழிக்க வேண்டும்.

சட்டசபையில் பண்பாளர்களை நாம் காண வேண்டும். சுயநலமில்லாதவர்களை பொதுவாழ்வில் பூரண அக்கறை கொண்டோரை நாம் ஆதரிக்க வேண்டும். பொதுவாழ்வில் இன்று உலவும் நச்சுகளை, சுயநலமிகளை, சுரண்டுவோரை, ஏமாற்றுவோரை, வேஷதாரிகளை நாம் அகற்ற வேண்டும். நாட்டின் நீதிமன்றமும் காவல்துறையும் அவர்களை அவர்கள் இருக்க வேண்டிய இடத்தில் வைக்க வேண்டும். தவறு செய்தோரை மன்னிப்பது, தனிமனித வாழ்வின் பெருந்தன்மை ஆகும். பொதுவாழ்வில் தவறு செய்தோரை மன்னிக்க இயலாது. தவறுக்குத் தண்டனை அளிக்கும்போதுதான், சட்டம் செயல்படும் போதுதான்—நல்லவர் அல்லாதோர் தீமை புரிய, சுயநலமான காரியம் செய்ய, அடிதடிமூலம் காரியம் செய்ய அஞ்சுவார்கள்.

தம்பீ! உனது ஊரில் அநியாயக்காரர்களைத் தலையெடுக்க விடாதே!

தம்பீ! இது களை எடுக்கவேண்டிய காலம்; பொது வாழ்வைத் தூய்மைப்படுத்தவேண்டிய தருணம்.




## "இன்று நாம் செய்யவேண்டியது என்ன?"

"நாட்டுக்கு என்ன நல்ல திட்டங்களை வைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்கிறார்கள் சிலர், கூட்டங்களில். முதலில் எனக்கு எழும் வியப்பு 'இதையெல்லாம் ஆளும் கட்சி அமைச்சர்களையல்லவா பார்த்துக் கேட்க வேண்டும்...? அங்கே வாய் முடி மௌனியாக நின்று பேச்சைக் கேட்டுவிட்டு வருகிறார்களே!' என்கிறதாபம்.

இரண்டவதாக, நாடு போய்க்கொண்டிருக்கிற கீழ்நோக்கிய வேகத்தை எப்படித் தடுத்து நிறுத்தலாம் என்பதற்கு அரசியல்வாதிகளையோ, சோதிடர்களையோ நம்பிப் போக வேண்டியதில்லை.

கொள்ளைகளையும், சுரண்டல்களையும், லஞ்சத்தையும், ஊழலையும் தடுத்தாலே போதும். நாட்டில் நீதியும் சட்டங்களும் செயல்பட்டாலே போதும். இந்த நாட்டிலுள்ள அரசியல் கொள்ளைக் கூட்டம் சிறைக் கம்பிகளுக்குப் பின்னால் இருக்கும். மக்களுக்கு நீதிமீதும் நியாயங்கள் மீதும் நம்பிக்கை பிறக்கும். நல்லவர்களும், நாட்டின்பால் அக்கறை கொண்டவர்களும் மேலே இருக்கும்போது, நீதிமன்றமும் அதிகாரிகளும் காவல் துறையும் அநியாயங்களுக்கு உடந்தை போகமாட்டார்கள்.

நீதியும், சட்டங்களும் செயல்பட நாம் என்ன செய்யவேண்டும்...?

நல்லவர்களை, யோக்கியர்களை, சுயநலமற்றவர்களை, நாட்டின்பால் உண்மையான அக்கறை கொண்டவர்களை நாம் தேர்ந்தெடுக்க வேண்டும்.

அதற்கு இப்போது ஓர் அருமையான சந்தர்ப்பம் வந்திருக்கிறது—நல்லவர்களைத்தேர்ந்தெடுக்க, நாணயமானவர்களை—யோக்கியர்களை—அரசியலில் இழுக்க, தியாக உள்ளம் படைத்தவர்களைப் பொதுநலத் தொண்டுக்கு அழைக்க நமக்கு இப்போது ஓர் அற்புதமான வாய்ப்பு கிட்டியிருக்கிறது.

விரக்தியுடன் பேசியவர்களுக்கு ஒரு விடிவு காலம். 'என்ன செய்வது...நாட்டின் நிலை இவ்வளவு கேவலமாகப் போய்விட்டதே!' என்று பொருமியவர்களுக்கு ஒரு மகத்தான வாய்ப்பு. 'நாடு இப்படியே போனால் என் குழந்தைகளின் வருங்காலம் என்னாகும்?' என்று வருத்தப்பட்டவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கிட்டியிருக்கிறது. அவர்கள் இந்தச் சந்தர்ப்பத்தை உணர்ந்து செயல்பட்டால், நாட்டுக்கு விடிவுகாலம் பிறக்கும்

அல்லது 'நான் என்ன செய்ய முடியும்...? எனது வோட்டு ஒன்றே ஒன்றுதான். என் குடும்பவோட்டு நாலுதான். தேர்தலை நிர்ணயிப்பவர்கள் ஏழை பாமர மக்கள்; கிராமத்து மக்கள்!' என்று எண்ணிக்கொண்டு உட்கார்ந்திருந்தால், அவர்கள் மீண்டும் கோட்டை விடுவார்கள்.

'கிராமத்து மக்கள் புத்திசாலிகள். விவரமாக எடுத்துச் சொன்னால் கேட்பார்கள்! நான் சொல்லப் போகிறேன்! இதுதான் பொதுஜனத் தொண்டு! இதை நாட்டுக்காக நான் செய்யப்போகிறேன்! இப்போது தான் செய்ய வேண்டும். அடுத்தவீட்டு ஆறுமுகத்தை யும் எதிர்வீட்டு ஏகாம்பரத்தையும் அழைத்துப் பேசப் போகிறேன். எல்லோருமாக இறங்கினால் செய்து விடலாம்!' என்று நம்பி இறங்க ஒரு மகத்தான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

1962-ல் அண்ணா தேர்தலுக்கு நின்றபோது, சென்னை மருத்துவக் கல்லூரி மாணவர்கள் ஒரு பத்து பேர் கூடினார்கள். தங்களது சொந்தச் செலவில் எந்த வித அழைப்புமின்றி அண்ணாதுரைக்காக பஸ் ஏறினார் கள். வீடு வீடாகப் போய் அவருக்காக வோட்டுக் கேட்டார்கள். மருத்துவக் கல்லூரி ஒன்று நான் அறிந்த விஷயம். இப்படிப் பல கல்லூரிகளிலிருந்து மாணவர் களும் ஆசிரியர்களும் இறங்கி, கிராமத்துக்குப் போய் வீடு வீடாகப் பேசினார்கள். நியாயத்தை எடுத்துச் சொன்னார்கள். அந்தத் தேர்தலில் அண்ணா தோற்றுப் போனது வேறு விஷயம்! ஆனால்,

இதன் விளைவாக, இந்தியாவிலேயே ஏற்படாத ஒரு மகத்தான ஆளுங்கட்சி மாற்றம் இருபதாண்டுகளில் 1967-ல் தமிழ்நாட்டில் நிகழ்ந்தது. அறிஞர் அண்ணா

துரை பதவியேற்றார். அதேபோன்று சொல்வாக்கு மிகுந்த காமராஜரை ஊர்பேர் தெரியாத சீனிவாசன் என்ற இளைஞர் தோற்கடித்தார். காரணம் இளைஞர் சீனிவாசனுக்காக வீடு வீடாகப் போய் ஓட்டுக் கேட்டார்கள். இன்று மீண்டும் இருபதாண்டுகள் ஆகிவிட்டன. லஞ்ச ஊழல்—சுயநலப் பாரம்பரியத்திலிருந்து தமிழ் நாடு விடுபடவேண்டிய தருணம் வந்துவிட்டது.

இது நிகழத்தான் போகிறது. இனியும் இவர்கள் ஏமாற்ற முடியாது. 'எத்தனை காலம்தான் ஏமாற்று வார் இந்த நாட்டிலே!' என்ற ஒரு சினிமாப் பாட்டை எம்.ஜி.ஆர் பாடினார். இன்று அவர் கட்சிக்காரர்களிடம் அதே கேள்வியைத் தமிழக மக்கள் கேட்க ஆசைப்படு கிறார்கள்.

நாட்டின் சரிவை நாம் தடுக்க வேண்டுமானால், நல்லவர்களும் படித்தவர்களும் களத்தில் இறங்கத் தயாராக இருக்க வேண்டும். தங்கள் நேரத்தையும் உழைப்பையும் பணத்தையும் தியாகம் செய்து இறங்க வேண்டும். துணிச்சல் வேண்டும். உறுதி வேண்டும். 'என் குழந்தைகளின் எதிர்காலத்துக்காகப் போராடு வேன்' என்று எண்ணி, சில காயங்களையும்—நேர்ந் தால்—ஏற்கத் தயாராயிருக்க வேண்டும். நல்லவர்கள் மீண்டும் தலைமையேற்க நாம் உதவ வேண்டும்.

கல்லூரி இளைஞர்களும் பெண்களும் கிராமத்துப் பெரியவர்களும் மனது வைத்தால், இது முடியாத காரியமல்ல; நடக்க முடியாத விஷயமல்ல. 1967-ல் ஊழலையும் அதிகார வெறியையும் கண்ட பொதுமக்கள் அரசாங்கத்தையே மாற்றினார்கள். அதே போல, இந்திராகாந்தியின் சர்வாதிகாரத்தைப் பற்றிய பயம்

வந்தபோது, அவரையும் தூக்கியெறிய மக்கள் தயங்க வில்லை.

அதாவது, கிராமத்து மக்கள் ஒன்றும் முட்டாள் களல்ல; விஷயம் தெரியாதவர்களல்ல. கொஞ்சம் விளக்கினால் போதும்; பாடுபட்டால் போதும்; களத் தில் இறங்கினால் போதும். சிறைக்கம்பிகளுக்குப் பின்னால் இருக்க வேண்டியவர்களை, நாம் நாட்டின் தெருக்களிலே நடமாட அனுமதிக்கக்கூடாது என்று வேகம் இருந்தால் போதும்.

'இது சுலபமல்ல!' என்று சிலர் சொல்லக்கூடும். யாரும் எதையும் தங்கத் தாம்பாளத்திலே வைத்து இனாமாக நமக்குத் தருவதில்லை.

'விதை நட்டால் செடி முளைக்கிறது.'

'உழைத்தால் பலன் கிடைக்கிறது.'

அதேபோல் நாம் பாடுபட்டால் பலன் கிடைக்கும். அந்த நம்பிக்கை இருந்தால் போதும். நமது உழைப்பின் பலனைத் தேர்தல் முடிவில் நாம் காணலாம். 'நல்லது நிகழவேண்டும்' என்ற எண்ணத்தை ஆழ்மனத்தில் போட்டுவிட்டு, கல்லூரி இளைஞர்களும், கிராமத்துப் பெரியவர்களும் இறங்கினால்—செய்ய வேண்டிய கடமையைச் செய்தால்—பலனை நாமும் நம் சந்ததி களும் அனுபவிப்பார்கள்.

தம்பீ! பழம் கனிந்து மரத்தில் சிவந்து தொங்குவது போல, மக்கள் மனம் இன்று கனிந்திருக்கிறது. இதுவே நல்ல தருணம்!




## நமக்கு வேண்டிய மனோபாவம்

ஒவ்வொரு முறையும் அமெரிக்கா செல்லும்போது என் மனத்தில் ஆழமாகப் பளிச்சிடும் எண்ணம் இது தான். இந்தியாவிலும் நம்மவர்களைப் பார்க்கிறேன்; அமெரிக்காவிலும் நம்மவர்களைப் பார்க்கிறேன். அமெரிக்காவில் வாழ்கின்ற இந்தியர்கள் சிறப்போடு வாழ்கின்றனர்; வளமோடு வாழ்கின்றனர்; திறமைசாலி களாகப் பிரகாசிக்கின்றனர். அமெரிக்கர்கள் பொறா மைப்படும் அளவுக்கு வாழ்வில் உயர்ந்து நிற்கின்றனர்.

அமெரிக்காவின் புகழ்மிக்க கம்பெனிகளில் இரண்டாவது, மூன்றாவது இடங்களை இப்போது இந்தியர்கள் வகிக்கிறார்கள். புகழ்பெற்ற வால்ஸ்டிரீட்

எனப்படும் பணம் புழங்கும் இடங்களிலே இன்று அனந்தராமன், மேத்தா, ரவிபத்ரா என்ற பெயர்கள் அடிபடுகின்றன.

இந்த விஷயங்கள் எதை நமக்குப் புலப்படுத்துகின்றன? இந்தியர்கள்—தமிழர்கள்—அறிவில், திறமையில் மற்ற எந்த இனத்துக்கும் தாழ்ந்தவர்களல்ல என்ற பேருண்மையைத்தான். அதே அறிவும் திறமையும் கொண்ட மக்களால்தான் இந்தியத் தாயகம் நிறைந்திருக்கிறது. மனிதனின் அறிவையும் திறமையையும் அமெரிக்கா பயன்படுத்துவதுபோல், நாம் நமது நாட்டிலுள்ள அறிவுக்கும் திறமைக்கும் வாய்ப்பளிப்பதில்லை. வாய்ப்புக்கான சூழ்நிலையை இங்கே ஏற்படுத்தவில்லை. திறமைகளைப் பிரகாசிக்க விடுவதில்லை. பாரம்பரியப் பழக்க வழக்கங்களும், ஜபர்தஸ்து நிறைந்த அரசாங்கக் கெடுபிடிகளும் மனிதர்களை இங்கே நெருக்கி, முடக்கி வைத்திருக்கின்றன.

அமெரிக்காவில் நிலவும் சூழ்நிலை என்ன என்று நான் யோசிப்பதுண்டு. அங்கே எல்லோரும் உழைக்கிறார்கள். உழைப்பில் கௌரவம், அகௌரவம் என்பதில்லை. தினம் எட்டு மணி நேரமும், சொந்தத் தொழிலானால் பதினாறு மணி நேரமும் பாடுபடுகின்றனர். எதையும் சாதிக்க முடியும், அடைய முடியும் என்று நம்புகின்றனர். ஒருவரோடொருவர் விட்டுக்கொடுக்கும் மரியாதை மனோபாவத்துடன் பழகுகின்றனர். மாறுதலுக்குத் தங்களை உடனடியாகத் தயார் செய்துகொள்கின்றனர். பிரச்னைகள் ஏற்பட்டால் மலைத்துப் போவதில்லை; அஞ்சுவதில்லை. 'ஐயோ! இப்படி ஆகிவிட்டதே!' என்று கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதில்லை.

ஜேம்ஸ் ஆலன் என்ற மிகப்பெரிய தத்துவ ஞானி ஓரிரு வாக்கியங்களில், சூழ்நிலையின் காரணங்களை மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறார். அவர் கூறுகிறார்: 'மனிதனின் எண்ணங்களே சூழ்நிலைகளாக மாறுகின்றன!'

மனிதன் என்ன எண்ணுகிறானோ அதுவாக மாறுகிறான்! சுய முன்னேற்றம் கொண்ட எண்ணங்கள், முன்னேறும் ஒரு சமுதாயத்தை உருவாக்குகிறது. 'உழைக்க வேண்டும்; நேர்மையாக வாழ வேண்டும்; நிறையச் சம்பாதிக்கவும்வேண்டும்!' என்ற எண்ணங்கள், ஒரு வசதி படைத்த சமுதாயத்தை உருவாக்குகின்றன. 'நியாயத்துக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும்' என்ற எண்ணம், நீதியை, நியாயத்தை, சட்டதிட்டங்களை மதிக்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்குகிறது. ஒவ்வோர் ஊரும் ஒரு சமுதாயமாகத் தங்களை எண்ணிப் பெருமைப்படும் போது, அந்தப்பெருமையை நிலை நிறுத்தும் வகையில், பரஸ்பரம் ஒருவருக்கொருவர் உதவுகின்றனர்; சமுதாயப் பணிகளில் ஈடுபடுகின்றனர். 'யாசிப்பது, கையேந்துவது, பிறரிடம் இனாமாகப் பொருளைப் பெறுவது கேவலம்' என்ற எண்ணங்கள், மனிதனைத் தன்மானத்தோடு சுதந்திரமாக வாழவைக்கின்றன.

ஒரு நாடு முன்னேறுவதற்கும், வசதியுடன் வாழ்வதற்கும், நீதியை மதிப்பதற்கும், நெறிகளுடன் இயங்குவதற்கும் மக்களிடையே நிலவும் எண்ணங்கள்—மக்களது மனோபாவம்—சாதிக்க வேண்டும், முடியும் என்ற மனோபாவம்தான் காரணம்.

இந்த அடிப்படை மனோபாவ மாறுதல் ஏற்படாத வரை—நமது முன்னேற்றம் அங்கொன்றும் இங்கொன்று

மாக ஒரு திட்டுத்திட்டான சிறு முன்னேற்றமாகத்தான் அமையும்.

சமீபத்தில், நானும் ஓர் இந்தியப் பேராசிரியரும் ஒரு முன்னேறிய மனிதரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். பேராசிரியர் கூறினார்: "அவருக்கு எல்லா வசதிகளும் இருந்தன. அதுதான் அவரது முன்னேற்றத்துக்குக் காரணம்!" என்று. எல்லா வசதிகளும் இருக்கும் பலரை எடுத்துக்காட்டி, "ஏன் அவர்கள் வசதி இருந்தும் முன்னேறவில்லை?" என்று கேட்டேன். பேராசிரியர் பேசவில்லை. "இன்று முன்னேறிய மனிதர், ஒரு காலத்தில் ஒன்றுமில்லாதவராகத்தானே வாழ்க்கையைத் துவங்கினார் கிராமத்தில்? எல்லா வசதிகளையும் எப்படி ஏற்படுத்திக்கொண்டார்? சொந்த அறிவினால், திறமையினால், முயற்சியினால்! அதை மறந்துவிட்டு, ஏதோ யாரோ எல்லா வசதிகளையும் அவருக்கு உயில் எழுதி வைத்துவிட்டுப் போனதைப்போல் பேசுகிறீர்களே!" என்றேன். பேராசிரியர் மௌனம் சாதித்தார். இந்தியர்களாகிய—நாம்—குறிப்பாக தமிழ்நாட்டில் வாழும் நாம்—முன்னேற்றத்தின் உண்மையான காரணங்களைக் கண்டுபிடித்து அதைப் பின்பற்றி உழைப்பதற்குப் பதில், நமது கையாலாகாதத்தனத்துக்குச் சமாதானம் சொல்வதில் நமது அறிவையும் திறமையையும் உபயோகித்து வருகிறோம்.

அமெரிக்காவாழ் இந்தியர்கள் எல்லோரும் இங்கிருந்து போனவர்கள்தான். நம்மிடம் இருக்கும் அதே திறமை (Capacity) தான் அவர்களிடமும் இருக்கிறது. ஒரு மில்லிமீட்டர்கூட அதிகமில்லை.

அதேபோல, இந்தியாவிலுள்ள எல்லாப் புத்திசாலிகளும் அமெரிக்காவுக்கோ, வெளி நாட்டுக்கோ போய்

விடவில்லை. இங்கே எடுக்க எடுக்கக் குறையாத அளவுக்கு நம்மிடம் திறமைசாலிகள், அறிஞர்கள் இருக்கிறார்கள்.

தம்பி! அறிவும் திறமையும் மலரும் வாய்ப்புகளை நாம் நம் நாட்டில் ஏற்படுத்த வேண்டும். அதற்கான சூழ்நிலையை நாம் நம் நாட்டில் உருவாக்க வேண்டும். நமது சூழ்நிலையை நாம்தான் உருவாக்குகிறோம்; நமது எண்ணங்கள்தான் உருவாக்குகின்றன. முடியும் என்ற எண்ணங்கள், நம்மால் முடியும் என்ற நம்பிக்கை.

அதை உன்னிடம் நீ வளர்த்துக்கொள். அந்த எண்ணங்களை ஊரிலே சென்று விதை; ஊர்தோறும் விதை. நமக்கு வேண்டியது இன்று நமது மனோபாவத்தில் புரட்சி; மனோபாவத்தில் மாற்றம்; நல்லன விளையும், நல்லவற்றை ஏற்படுத்துவோம் என்ற நம்பிக்கை.

உன்னிடம் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நீ புறப்படு!




## “நாணயமானவர்கள் நமது பிரதிநிதிகளாக வரவேண்டும்!”

தமிழ்நாட்டின் அரசியல் நிலையே அதிசயமாய் இருக்கிறது; அலங்கோலமாய் இருக்கிறது!

தலைவர்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் மேடையில் பேசுகிறார்கள். ஏதாவது லட்சியங்களைப் பற்றிப் பேசுகிறார்களா? கொள்கைகளைப் பற்றிப் பேசுகிறார்களா? நாட்டின் நல்வாழ்வுக்கான திட்டங்களைப் பற்றிப் பேசுகிறார்களா? இல்லை தம்பி, இல்லை!

பின் எதைப்பற்றிப் பேசுகிறார்கள்? ஒருவரை ஒருவர் திட்டுகிறார்கள்; இகழ்கிறார்கள். நூற்றுக்

கணக்கான மக்களைக் காசுகொடுத்து லாரிகளிலே அழைத்து வந்து கூட்டம் சேர்க்கின்றனர்.

ஏன்?

'மக்கள் என் பக்கம்!' என்று கூட்டத்தைக் காட்டிப் பொதுமக்களிடையே ஒரு பிரமிப்பை ஏற்படுத்தினால் 'சாய்கிற பக்கமே சாய்கிற செம்மறியாடு'களான பொது மக்கள் இதை நம்பி வோட்டுப் போடுவார்கள் என்ற நம்பிக்கை இவர்களுக்கு!

'தாங்கள் யார் பக்கம்?' என்பதை மக்கள் இனிதான் தீர்மானிக்கப் போகிறார்கள். ஆனால், இம்முறை அவர்கள் ஏமாறப்போவதில்லை.

லாரிகளுக்கும், லாரிகளில் வருபவர்களுக்குச் சாப்பாடு போடவும், மேடைக்கும், மைக்குக்கும், ஒளிவிளக்குகளுக்கும், விளம்பரத்துக்கும் என்ன செலவாகும்? பல லட்சங்கள். அந்தப் பல லட்சங்களை, இன்றைய அரசியல் கட்சிகள் இத்தனை நாள் பதவியிலிருந்தபோது கொள்ளையடித்து வைத்திருக்கின்றன. அதைச் செலவழிக்கிறார்கள் இன்று. ஏனெனில், அதைச் செலவழித்துப் பதவியைப் பிடித்தால் மீண்டும் கொள்ளையடிக்கலாம் என்ற எண்ணம்தான்!

தம்பி! அது இம்முறை நிறைவேறப் போவதில்லை. ஏனெனில், இன்றைய பொதுமக்கள் விஷயம் தெரிந்தவர்கள். நெருக்கடியைப் பிரகடனப்படுத்தி ஜனநாயகத்துக்குக் கேடு செய்தார் என்று வலுமிக்கத் தலைவர் இந்திரா காந்தியையே பதவியிலிருந்து தூக்கியெறிந்தவர்கள் இந்த மக்கள்.

நாடு இன்று வன்முறையாளர்களிடம்—பண்பில்லாதவர்களிடம்—அடியாட்களிடம் போய்விட்டதே என்று

வருத்தப்படுபவர்கள், நமது கடந்தகாலச் சரித்திரத்தைக் கொஞ்சம் பின்னோக்கிப் பார்க்க வேண்டும். கடந்தகால நிகழ்ச்சிகள் என்ன?

காங்கிரஸ் ஆட்சியில், ஹிந்துப் பத்திரிகைக் காரியாலயத்தில் சிறு தொழிலாளர் பிரச்னை ஏற்படுகிறது. அது வன்முறையாக வளர்ந்து சிவகுருநாதன் என்ற 'ஸ்போர்ட்ஸ் எடிட்டர்' தாக்கப்பட்டார்; அடிக்கப்பட்டார். கலவரம் நிகழ்ந்தபின்னும், நஷ்டங்கள் ஏற்பட்டபின்னும், அரசாங்கமும் போலீஸும் பார்த்துக்கொண்டுதானிருந்தன. 'பாரம்பரியம்' துவங்குகிறது! காங்கிரஸ் துவக்கிவைக்கிறது!

தி.மு.க. ஆட்சியில்—கட்சிக் கும்பல்—குமுதம் பத்திரிகையைத் தாக்கியது. கண்ணாடிகள் உடைந்தன. குமுதம் ஆசிரியர் எஸ்.ஏ.பி., உள்ளே வந்த கற்களையெல்லாம் பொறுக்கித் தன் அறையிலேயே குவித்து வைத்திருந்தார். மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு என்றவர்களால் மாற்றுக் கருத்துக்கு மரியாதை தர முடியவில்லை! குமுதம் ஆசிரியர் அறை மீது கல்வீச்சு.

அண்ணா தி.மு.க. ஆட்சியில் ஆனந்த விகடன் பத்திரிகை ஆசிரியரை, ஏதோ தப்பி ஓடிவிட முயலும் பிரபல குற்றவாளி போல் ஒரே சமயத்தில் நான்கு இடங்களுக்கு போலீஸ் படையை அனுப்பிக் கைது செய்தார்கள்! கேவலம் ஒரு கார்ட்டூன் போட்டதற்காக!

தம்பி! இவர்களுடைய ஜனநாயகப் பாரம்பரியம் தொடர்கிறது! இவர்கள்தான் இன்று உன் வீட்டுக்கு வந்து உன் தெருமுனையில் நின்று, உனது ஊர்ச்

சந்தியில் மேடை அமைத்து உன்னைக் கெஞ்சுகிறார்கள்! வோட்டுக் கேட்கிறார்கள்!

பணம் தருவார்கள். ஊரிலே கள் கலயம் கட்டிக் கொள்ள லைசென்ஸ் தருவதாக ஆசை காட்டுவார்கள். ஊர்க் கோயில் உண்டியலை நீ கொள்ளையடிக்க நாளை தக்கார் பதவி தருவதாக இந்தத் தகாதவர்கள் கூறுவார்கள்.

"நாடு என்பது, அரசாங்கம் என்பது, ஒரு சட்ட திட்டத்துக்கு உட்பட்டது. நீதி நியாயங்களுக்குக் கட்டுப்பட்டு இயங்குவது அதிகாரிகளும், போலீஸாரும் நீதியை நிலைநிறுத்தப் பாடுபடுபவர்கள்; சம்பளம் பெறுபவர்கள்." இதுதான் இத்தனை நாளும் நாம் அறிந்த விஷயம்.

அப்படிப்பட்ட ஒரு ஜனநாயக அமைப்பையே மாற்றியவர்கள் இன்று நமது வோட்டைக் கேட்பவர்கள். அங்கங்கு தனது கட்சிக்காரர்களை அதிகாரிகளுக்கு மேலே வைத்துக்கொண்டு ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவன் போல் இவர்கள் செயல்பட்டார்கள்.

இவர்களுக்கு வோட்டுப் போடாதே. நாம் நல்லவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நாணயமானவர்கள் நமது பிரதிநிதிகளாய் வரவேண்டும் என்றுதான் கூறுகிறேன்.

தம்பி! உங்கள் ஊரில் ஒரு நல்லவர் இருந்தால், ஒரு நாணயமானவர் இருந்தால், ஒரு நல்ல ஆரம்பப் பள்ளி ஆசிரியர் இருந்தால் அவரைத் தேடிப் பிடி. மற்ற ஊர் ஆசிரியர்களை எல்லாம் ஒன்றுதிரட்டு. மற்ற இளைஞர்களை எல்லாம் கூட்டிப் பேசு. அங்கங்கே நல்ல மனிதர்

களை நிறுத்து. நல்லவர்களுக்கு ஆதரவு கொடு. அவர் களைத் தேர்ந்தெடு.

கிராமத்திலுள்ள நற்பணி மன்றத்தின் இளைஞர் களாகிய நீங்கள்—படித்த நீங்கள்—ஒன்று திரண்டு தெருவுக்குத் தெரு சென்று வீட்டுக்கு வீடு சென்று நல்லவர்களுக்காக வோட்டுக் கேளுங்கள், நல்லவர்கள் வெற்றியடைவார்கள்.

இந்த உலகமே மாறுதல்களினால்தான் வளர்ந்திருக் கிறது. இந்த உலகிலே புரட்சிகளுக்கும், மாற்றங்களுக்கும் இளைஞர்கள் தான் முன்னோடிகளாய் இருந்திருக்கின்ற னர். ஒன்று நிச்சயம், எண்ணிப் பார்—

இன்றைய கட்சிகளில் ஏதும் இளைஞர்களிடம் போகவில்லை. ஏனெனில், இளைஞர்கள் நீதி நியாயத்துக்காக, வேலை வாய்ப்புக்காக அநியாயங்களுக் கெதிராகக் கொதித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர் களிடம் இன்றைய அரசியல்வாதிகள் போக முடியாது.

உனது வலிமையை உணர். மகத்தான மாற்றம் உன்னால் ஏற்பட இருக்கிறது என்பதை எண்ணிப் பார்!

நீ சாதிப்பாய்! உன்னால் முடியும். நாட்டில் நல்ல வர்கள் இன்றும் இருக்கிறார்கள். உன் வாழ்விலும், நாட்டின் வாழ்விலும் மாற்றத்தை ஏற்படுத்த ஒரு மகத்தான சந்தர்ப்பம் இது!




# இன்று உலகம் உனக்காக!

''நம்மால் முடியும்! என்று எழுதுகிறீர்களே, உண்மையிலேயே நம்மால் இது முடியுமா? நாடு இன்றிருக்கும் நிலை மிக மோசமாக அல்லவா இருக்கிறது. திருத்தமுடியாத நிலைக்கு அல்லவா போய் விட்டது'' என்று சிலர் பேசுகிறார்கள்.

அவர்கள் குரலில் கோபத்தைக் காண்கிறேன்; சோகம் தெரிகிறது; விரக்தி பெருக்கிடுகிறது.

நான் சில சமயம் யோசிப்பதுண்டு. நாம் எழுதுகிற வாசகங்கள், பேசுகிற மேடைப் பேச்சுக்கள், எடுத்துக் காட்டுகிற வாதங்கள் எல்லாம் நமது நம்பிக்கைகள்

தானா, இல்லை இதில் ஆழமான உண்மை இருக்கிறதா? அந்த உண்மைகளின் அடிப்படையில்தான் இவ்வுலகம் இயங்குகிறதா?

நம்மால் முடியும் என்ற வாசகம், சரித்திர அடிப்படையைக் கொண்டது. ஹிட்லரும், இடிஅமீனும் ஆட்சி செய்தபோது இதைவிடக் கொடுமைகள் நடந் திருக்கின்றன. மக்கள் அதிலிருந்து மீண்டிருக்கிறார்கள். உலகம் தன்னைத்தானே சரிசெய்து கொண்டு—தீய வற்றை அகற்றி, நன்மையை நாடி நாளும் வளர்கிறது. 'உண்மை முடிவில் வெல்லும்' என்ற நம்பிக்கை எனக் கிருக்கிறது என்ற காந்தியின் சத்திய வாசகத்தை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும்.

'நம்மால் முடியும்' என்பதுதான் இவ்வுலகிலுள்ள எல்லா ஜீவராசிகளின் அடிப்படை இயல்பு. இந்த ஜீவன் வாழத் துடிக்கிறது; எதையும் சமாளிக்கும் இயல்பு அதற்கு இயற்கையாக இருக்கிறது. எதையும் தெரிந்து கொண்டு முன்னைவிட ஒரு படி மேலே செல்வதுதான் வாழ்வின் அடிப்படை இயல்பாக இருக்கிறது. உண்மை யையும், நன்மையையும் நாடிச் செல்வதன் மூலம்தான், தனது பரிணாம வளர்ச்சியைப் பூர்த்தி செய்கிறது.

ஆகவே, நம்மால் முடியும் என்பதற்குச் சரித்திர அடிப்படை உண்டு; தத்துவ அடிப்படை உண்டு.

அதைவிட, நம்மால் முடியும் என்ற எண்ணமும் நம்பிக்கையும், இவ்வுலகையே மாற்றக்கூடிய வலிமை படைத்தவை. நம் எண்ணங்களுக்கேற்பத்தான் நம் வாழ்வு அமைகிறது. நமது எண்ணங்கள்தான் நமது வாழ்வை—நமது விதியை—நமது நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் நிர்ணயம் செய்கின்றன. 'எதை மனம் தன் மனக் கண்முன் காண்கிறதோ, எதை மனம்

நம்புகிறதோ அதை அடைகிறது; அதுவாக மாறுகிறது' என்பதுதான் மனம் பற்றிய உண்மை; இந்த உலகச் சாதனைகளின் மகத்தான ரகசியம்...ஏன் இதை நான் வலியுறுத்துகிறேன்?

இந்த அடிப்படை உண்மையைத் தெரிந்து கொண்டால் நாம் நம்மை மாற்றிக் கொள்ளலாம்; நாட்டை மாற்றிவிடலாம். உள்ளே எதைப் போடு கிறோமோ, எதை விதைக்கிறோமோ அதற்கேற்ற—அதற்கு ஈடான—பலனை நாம் பெறுவோம். எந்த நம்பிக்கைகள் நம்மை ஆட்டுவிக்கின்றனவோ அதன் பலன்களைப் பெறுவோம். ஏனெனில், எண்ணமும் நம்பிக்கையும் நமது செயலைத் தூண்டுகின்றன, எண்ணம், நம்பிக்கை, செயல் என்ற ரீதியில்தான் புலனாகாத உலக சக்தி புலனாகின்ற பொருள் வடிவம் பெறுகிறது.

இதைக் கொஞ்சம் ஆழமாக நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

சில ஆண்டுகளுக்கு முன் சமுதாய இயல் நூல் ஒன்றில் விசித்திரமான ஒரு தனிச் சம்பவத்தை எழுதி இருந்தார்கள்.

ஒரு தீவில் வாழும் குரங்குகளின் வாழ்க்கை முறை யைச் சமுதாய இயல் அறிஞர்கள் கவனித்து வந்தார் கள். வழக்கமாகக் கிழங்குகளைத் தோண்டி எடுத்து மண்ணைத் தட்டிவிட்டுச் சாப்பிடும் குரங்குகள், ஒரு நாள் அருகிலிருந்த ஓடையில் கிழங்கைத் தண்ணீரில் கழுவிவிட்டுச் சாப்பிட ஆரம்பித்தன. இது ஒரு புதிய செயல்; அங்கிருந்த ஒரு குரங்கு தானாகத் தெரிந்து கொண்ட அறிவு. அந்தத் தீவுக் குரங்குகள் எல்லாம் அதைப் பின்பற்றின.

இந்தத் தீவுடன் எந்தவிதத் தொடர்பும் இல்லாத மற்றொரு தீவில் இருந்த குரங்குகளும், விரைவில் இப்படிக் கிழங்குகளைக் கழுவிவிட்டுச் சாப்பிடத் துவங்கின. இங்கிருந்து எந்த ஒரு குரங்கும் அங்கு சென்று அதைச் சொல்லிக் கொடுக்கவில்லை. பிறகு எப்படி அந்த இன்னொரு தீவுக் குரங்குகளுக்கும் இந்தப் பழக்கம் வந்தது? அதாவது, நாம் கண்டுபிடித்த அறிவு —சக்தி ரூபத்தில்—எண்ண வடிவில்—இந்த உலகம் பூராவும் பரவுகிறதா?

கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும்.

நான் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டத்துக்காக ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தபோது எனது பேராசிரியர் சில மூலிகைகளிலிருந்து புதியமுறை கள் மூலம் சில புதிய மருந்துகளைப் பிரித்து எடுத்துக் கொண்டிருந்தார். அவர் தனது இரண்டாண்டு கால ஆராய்ச்சிகளை வெளியிட முயன்ற சமயம், தனித்தனி யாக இதே ஆராய்ச்சி முடிவுகளைப் பம்பாயிலிருந்தும், இஸ்ரேலிலிருந்தும் வெளியிட்டார்கள். அதே பொருள்! கிட்டத்தட்ட அதே முறை! எங்களுக்கெல்லாம் நம்ப முடியாத அதிசயம்! இப்படிப் பலமுறைகள் விஞ்ஞானி கள் பலருக்கு இதுபோன்ற அனுபவங்கள் ஏற்பட்டிருக் கின்றன என்று எனது பேராசிரியர் கூறினார்.

அப்படியென்றால் ஒருவர் மனத்தில் தோன்றிவிட்ட எண்ணங்கள், அதே ஆர்வத்தால் தூண்டப்படும் மற்றொரு மனத்தில் சென்று படிகின்றனவா? உலகம் பூராவும் வியாபித்து நிற்கின்றனவா?

அப்படியானால் நாட்டைப் பற்றி அக்கறைப்படும் நாலு பேருடைய நல்லெண்ணங்கள் நாலு கோடி மக்களின் மனத்திலோ, அங்கங்குள்ள நல்லவர்களின்

மனத்திலோ பரவுவதில்—இடம் பிடிப்பதில் என்ன ஆட்சேபணை இருக்கமுடியும்?

இந்த நாட்டுக்கு ஒரு விடிவு வரவேண்டும் என்று தீவிரத்துடன் நாம் எண்ணினால் போதும். அத்தகைய தாகம் கொண்டோர் உள்ளமெல்லாம் அந்த எண்ணம் நிறையும்.

இப்படித்தான் ஒரு தலைவன் காணும் கற்பனை—நாட்டு மக்கள் காணும் கற்பனையாக மாறுகிறது. ஒரு தலைவனின் மனத்தில் விழுந்த எண்ணத்தின் விளைவாக லட்சோப லட்சம் மக்கள் அவன் நிலையில் நின்று அவனால் எண்ணத்தால் தொடப்படுகிறார்கள்; அவனைப் பின்பற்றுகிறார்கள்.

தம்பீ! நாட்டின்மீது அக்கறை நமக்கு ஆழமாக, தீவிரமாக இருக்கும்போது அது ஒத்த உள்ளங்களை எல்லாம் தொடப்போகிறது; சிலிர்த்தெழச் செய்யப் போகிறது; செயல்படவைக்கப் போகிறது. இந்த நாடு நமது அறிவுக்கும் திறமைக்கும் ஏற்ப, பெரும் வலிமை படைத்த வளம்மிகுந்த நாடாக மாறத்தான் போகிறது. எனக்குச் சந்தேகமில்லை.

வலிமை படைத்த எண்ணங்களைப் பரப்பு.

நம்பிக்கையைப் பரப்பு.

உலகம் உன்னைப் புரிந்துகொள்ளட்டும்.

நம்பு. இன்று உலகம் உனக்காகத் தயாராய் இருக்கிறது.




## நாம்தான் சிருஷ்டிகர்த்தா!

அறிவு பரவுகிறது என்கிற விஷயம், பல சோதனைகள்மூலம் வெற்றிகரமாகச் சோதிக்கப்பட்டிருக்கிறது.

அதாவது,.பெறப்படும் புதுஅறிவு எண்ண நிலையில் சக்தி நிலையில்—புலனுக்கப்பால் ஆகாய அலைகளாக நிலவுகின்றன. புலனறிவுக்கு அப்பாற்பட்ட இந்தச் சக்தி நிலை சதா தொடப்படுகிறது. நமக்கு வேண்டிய வானொலி நிலையத்தைப் பெற நாம் மீட்டரைத் திருப்புவதுபோல், நமக்குத் தேவைப்படும் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிச் சிந்திக்கும்போது, அது சம்பந்தமான உண்மைகளை நாம் ஆகாய அலைகளிலிருந்து பெறமுடியும்.

ஹாவாயைச் சேர்ந்த அமெரிக்க சைவத் துறவிகள் இன்னும் ஒரு படி மேலே சென்று கூறுகிறார்கள் : 'உருவமற்ற அதீத மனித இனம், அறிவு ஜீவிகளாக, எண்ண நிலையிலிருந்து நமது பூமியை ஊடுருவுகிறார் கள். நம் எண்ணங்களை உருவாக்குகிறார்கள்; உதவு கிறார்கள். இதைத்தான் நம்மால் புரிந்துகொள்ள முடியாத பெரும் சக்தி நம்மைச் சுற்றி நிலவுவதாக நாம் உணர்கிறோம்' என்று எழுதுகிறார்கள்.

'வன்முறையைத் தூண்டும்—கொலை, களவு, கற்பழிப்பு போன்ற நிகழ்ச்சிகளை சினிமாவாகவோ, கதை நாவல்களின் மூலம் மனக்கற்பனையிலோ பார்க் கும் மக்களின் உணர்வுகள் பாதிக்கப்படுகின்றன. நாளடைவில் இதையொட்டியே அவர்கள் வாழ்வு இயங்குகிறது. ஒவ்வொரு ஜீவனைச் சுற்றிலும் ஒரு சக்திநிலை சூழ்ந்திருக்கிறது. மனித எண்ணங்கள் இச் சக்திநிலையில் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. நாளடை வில், காலப்போக்கில் இது நமது உடல் இயக்கத்தையும் பாதிக்கின்றது' என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார் கள்.

'நேரடியாகவோ, மனத்தாலோ எதை நாம் காண் கிறோமோ, அது உண்டுபண்ணப்படுகிறது' என்று எழுதுகிறார் பிரையன் ஜோசப்சன் என்ற பௌதிக விஞ்ஞானி.

விளக்கமாகச் சொல்லப்போனால், நாட்டின் அவலத்தைப் பற்றிப் பேசும்போது, எண்ணும்போது மேலும் அவலம் உருவாக்கப்படுகிறது. அதை நீக்கு வதற்கு வழி, மாற்று எண்ணங்களை—வலிமை படைத்த எண்ணங்களை—மாற வேண்டும் என்ற எண்ணங்களை நிலவவிடுவதுதான்.

நாட்டில் லஞ்சமும் ஊழலும் அநியாயமும் மலிந்துவிட்டனவே என்று துன்பப்படுவதற்குப் பதில், நியாயம் நிலைபெற வேண்டும்; அநியாயம் புரிவோர் அதன் பலனைப் பெறவேண்டும்; பொது மக்களின் வரிப்பணத்தைச் சூறையாடும் அரசியல்வாதிகள் தண்டிக்கப்பட வேண்டும் என்று மக்கள் தீவிரமாக எண்ணினால், நம்பினால் நிச்சயம் அது நம் செயலைத் தூண்டும்; நாட்டைச் சுரண்டி வாழ்ந்துவரும் அரசியல்வாதிகள் சிறைக்கம்பிகளுக்குப் பின்னால் இருப்பார்கள்.

அகிம்சை என்ற எண்ணத்தைப் பரவவிட்டு, ஒரு சாத்வீகப் போராட்டத்தின்மூலம்தான் மகாத்மாகாந்தி நமக்கு விடுதலை வாங்கித்தந்தார்.

'நாட்டிலுள்ள பத்து சதவீத மக்கள் தியானம் செய்தால்கூடப் போதும், உலகெங்கிலும் அமைதியும் அன்பும் பெருகும்; யுத்த அபாயம் குறையும்' என்கிறார், மகரிஷி மகேஷ்யோகி. எவ்வளவு உண்மை!

நமது ஊரில் சில ஊர்க் கோயில்கள் திடீரென்று பிரபலம் அடைகின்றன. 'கண்ணுக்கெதிரே பலன் கொடுக்கிறாள் அன்னை!' என்று கூறுகிறார்கள். இதெல்லாம் எப்படி நேருகிறது...?

'நட்ட கல்லைத் தெய்வமென்று நாலு புஷ்பம் சாத்துகிறாயே, அங்கே அந்தக் கல்லிலா தெய்வம் இருக்கிறது...? அந்தத் தெய்வம் உனது நம்பிக்கையாக உனக்குள் அல்லவா இருக்கிறது...' என்று கூறுகிறார் சிவவாக்கியர் என்ற ஞானி.

வெறும் கல்லில் எப்படி அன்னை மாதேவி குடிபுகுந்தாள்...? மக்கள்—பெரும்பாலான மக்கள்—நம்பிக்கை

யுடன் அங்கே மகத்தான சக்தி குடிகொண்டிருப்பதாக மனக்கற்பனை செய்யும்போது, நம்பும்போது அந்த சக்தி அங்கே உண்டுபண்ணப் படுகிறது—பிரையன் ஜோசப்சன் கூறுவதுபோல. அதுதான் உண்மை!

பலருடைய எண்ணசக்தி அன்னையாக, ஆண்டவனாக அங்கே உருவாகி நிலவுகிறது. கல், தெய்வமாகிறது. அந்த நம்பிக்கை நலியும்போது, மக்கள் கூட்டம் அங்கே போவதில்லை. மற்றொரு பாழ்பட்ட கோயிலாக அது மாறுகிறது.

தம்பீ! உன்னிடம் ஏன் இதைச் சொல்கிறேன்? எதை உன் மனக்கற்பனையின்மூலம் நீ காண்கிறாயோ, அது உண்டுபண்ணப்படுகிறது என்பதை நினைவில் கொள். இதுதான் சமீபத்திய விஞ்ஞானம். அன்று தொட்டு நம் யோகிகள் கண்ட உண்மை. ஆகவே, எவ்வளவு செல்வந்தனாக, புத்திசாலியாக நீ ஆக விரும்புகிறாயோ, அந்தக் கடைசி நிலையை அடிக்கடி உன் மனக்கண்முன் கொண்டு வா. அதை நீ அடைவாய்.

நீ நன்றாக இருந்து, இந்த நாடு குட்டிச்சுவராய்ப் போய்விட்டால், நீ வாழமுடியாது. ஆகவே, இந்த நாட்டைப் பற்றி எண்ணு எப்படி இருக்கவேண்டும் என்று எண்ணு. அதை உன் மனக்கண்முன் கொண்டு வா அடிக்கடி. தம்பீ! நம்பு. அது நிச்சயம் உண்டு பண்ணப்படும். நாம்தான் அதன் சிருஷ்டிகர்த்தா.




## சட்டம் செயல்படட்டும்

அண்ணாநகரில் ஒரு பிக்பாக்கெட்காரன் இருந்தான். (முதல் வார்த்தையைக் கொஞ்சம் அழுத்திச் சொல்லவும்) பார்ப்பதற்கு மைனர் மாதிரி இருப்பான். சகலகலாவல்லவன். ஊர் பூராவும் அவனைப் பற்றிய பேச்சாக இருந்தது. பர்ஸைப் பறிகொடுத்தோர் சொன்ன கதைகள் ஏராளம்; பரிதாபம்.

ஆனால், இது வெகுநாள் நீடிக்கவில்லை. ஒரு மோட்டார் சைக்கிள் திருடன், தன் கைவரிசையைக் காட்டத் துவங்கினான். இரவில் திடீரென்று தோன்றிக் கத்தியைக் காட்டி மிரட்டினான். ஓடுகின்ற மோட்டார் சைக்கிளிலிருந்தவாறே கழுத்துச் சங்கிலியை அறுத்துக் கொண்டு ஓடினான். பிக்பாக்கெட்டின் பிரபலம் படுத்தது.

இப்போது மற்றோர் அதிசயம் நிகழ்ந்தது. ஒரு கொள்ளைக் கூட்டம் புகுந்தது. வேறு மாநிலத்தவன் என்று பறையடித்தார்கள். மக்கள் பீதியடைந்து பயந்துபோய் வாழ்க்கை நடத்திக்கொண்டிருந்தார்கள். கொள்ளைக் கூட்டத் தலைவன் நடத்திய கொள்ளைகள் கொஞ்சநஞ்சமல்ல.

அதே அண்ணா நகரில் ஒரு சிறு சங்கம், சின்ன போர்டைத் தொங்கவிட்டுக் கொண்டிருந்தது. பெயர்: 'சமுதாய நல சங்கம்'. "நாட்டைத் திருத்தி, மக்கள் மனோபாவத்தை மாற்றி வறுமையை விரட்டி, பொருளாதார சுபிட்சத்தைக் கொண்டுவருவதே நோக்கம்" என்று இரண்டு மெலிந்த, வாலிபப் பட்டதாரிகள் அங்கே பேசிக்கொண்டிருந்தார்கள்.

ஊரில் இருந்த ஒரு பெரியவர், "என்ன தம்பி! ஊர் கொள்ளை போகுது! ராத்திரியிலே நாலு பேர் ரோந்து காவலுக்கு நிற்க நாதியில்லை. பூச்செடி வைக்கிறதை யும், பொருளாதார சுபிட்சத்தைக் கொண்டுவர்றதை யும் பத்திப் பேசறீங்களே?" என்று கேட்டார்.

இளைஞர்கள் யோசித்தார்கள்!

"பொருளாதாரமும் ஆச்சு, பூச்செடியும் ஆச்சு! நமக்கு முதல்லே பாதுகாப்புத் தேவை. அக்கிரமத்தை அடக்கணும், கொள்ளைக் கும்பலை ஊரைவிட்டுத் துரத்தணும்!" என்றார் சமுதாயநலச் சங்கத் தலைவர்.

செயலாளர் கூறினார் : "இவங்களை எப்படியாவது புடிச்சு ஜெயிலுக்கு அனுப்பணும். அதுதான் சமுதாயத் துக்கு நாம் செய்யும் பெரிய சேவையாகும்!"

சங்கத்து மெம்பர்கள் அவர்கள் இரண்டு பேர் மட்டுமே என்பதால் அவர்கள் நெடுநேரம் சிந்தித்தார்

கள். பிறகு 'நமக்கேன் வம்பு' என்று சங்கத்தைக் கலைத்துவிட்டு வீட்டுக்குப் போனார்கள்.

அண்ணா நகரில் நடந்தது கற்பனையாயிருக்கலாம். ஆனால், அண்ணா நகரைத் தமிழ் நாடு என்று எடுத்துக் கொண்டோமானால், 'இது கற்பனை இல்லை, இது நிஜம்' என்று நீங்கள் சத்தியம் செய்வீர்கள்.

'நரி, இடமும் போகவேண்டாம், வலமும் போக வேண்டாம்; மேலே விழுந்து பிடுங்காமல் இருந்தால் போதும்!' என்று சொன்னவர்களைப்போல், நாட்டில் சுபிட்சத்தைக் கொண்டுவர முடிகிறதோ இல்லையோ —அக்கிரமம், அநியாயம், கொள்ளை, லஞ்சம் இல்லாமல் இருந்தால் போதும் என்று மக்கள் எண்ணும் நிலைக்கு இன்று விரட்டப்பட்டிருக்கின்றனர்.

இதுவா திராவிடப் பாரம்பரியம் அல்லது தமிழ்ப் பாரம்பரியம்? 'ஐயகோ! ஏ தாழ்ந்த தமிழகமே!'

ஒரு நாடு சுதந்திரம் பெறுவதன் நோக்கமே, அங்குள்ள மக்கள் தங்களது பூரணத் திறமைகளையும் உபயோகித்து எல்லோருக்குமாக ஒரு நல்ல நாட்டை உருவாக்கத்தான். அப்படி முன்னேறியிருக்க வேண்டிய நாம், இன்று எங்கே போய்விட்டோம்?

தஞ்சை மாவட்டத்தில் ஒரு தாசில்தாருடன் பேசிக் கொண்டிருந்தேன். நாணயமும் கடமையும் மிக்க அதிகாரியான அவர் மனம் நொந்து சொன்னார்: "நம்மிடம் தேவைக்கு மேல், மக்களுக்கு நன்மைசெய்யக் கூடிய சட்டங்கள் இருக்கின்றன. பிரச்னை என்ன வெனில், நமது நாட்டில் சட்டங்கள் செயல்படுவ தில்லை! நிக்ஸனைப் பதவியிலிருந்து இறக்கி அவரது அமைச்சரவையிலிருந்த பெரும்பாலானோரை ஜெயி

லுக்கு அனுப்பினார்களே வாட்டர்கேட் ஊழலுக்காக. அதுபோல் இங்கே ஒரு நாலு அமைச்சர்களுக்குச் சிறைத் தண்டனை கொடுத்தால் என்ன ஆகும் என்று எண்ணிப்பாருங்கள். சட்டம் செயல்பட்டால் அரசியலில் அடியாட்கள் இருக்கமாட்டார்கள். மேலே ஆட்சியில் தலைவனாக இருப்பவனுக்கு, சட்டத்திலும் நீதியிலும் நியாயத்திலும் நம்பிக்கை இருக்குமானால்தான் அது நாட்டின் கடைசிமட்டம்வரை பிரதிபலிக்கும். மேலே ஒரு திருடன் தலைவனானால் அவனைச் சுற்றித் திருட்டுக் கும்பல்தான் இருக்கும்!''

ஒரு சுயநலமில்லாத, வாங்குகின்ற சம்பளத்தில் குடும்பம் நடத்தித் திருப்தி காண்கின்ற ஓர் அதிகாரி நாட்டுக்கு எவ்வளவோ நல்லது செய்யமுடியும். நீதியையும் நியாயத்தையும் சட்டத்தையும் நிலைநிறுத்த முடியும். நாட்டில் நீதிநிலைபெறும்போது, நம் உடம்பை ஆரோக்கியப்படுத்தும் சுத்தக் காற்று பரவுகிறது. அந்த தாசில்தார் ஒரு சுத்தமான காற்று, உண்மைதான்

மிகவும் யோசித்து,—பிற நாட்டு ஜனநாயக மரப களை எல்லாம் ஆராய்ந்து—நமது அரசியல் அமைப்பை உருவாக்கி இருக்கின்றனர் நமது பெரியவர்கள். அதன் படி, ஊழலும் அநியாயமும், நிலையற்ற தன்மையும் உச்சகட்டத்துக்குப் போகும்போது, நாட்டில் ஜனாதிபதி ஆட்சி அமலாக்கப்படுகிறது.

ஜனாதிபதி ஆட்சி நிலைத்து இருக்குமானால் நமது ஜனநாயகத்துக்கு அர்த்தமில்லாமல் போய்விடும். அதேபோல் அவசரம் அவசரமாக மீண்டும் அரசியல் வாதிகளை—அதுவும் பழைய அதே நபர்களை—நாம் உள்ளே விடுவோமானால் தேர்தல் வெறும் கேலிக் கூத்தாகப் போய்விடும்.

கட்சி மாறுவதற்காக லட்சம் லட்சமாக ஓர் அரசியல் கட்சி கொடுக்கிறது என்பதும், அது பாராளு மன்றத்திலே பகிரங்கமாக்கப்பட்டிருக்கிறது என்பதும் நமது அரசியல் கட்சிகளுக்கும் அதன். தலைவர்களுக்கும், தலைவிகளுக்கும், பெருமை சேர்க்கும் விஷயமல்ல. சட்ட சபை உறுப்பினர்கள் லட்சங்களுக்குப் பேரம் பேசப்படு வதும், கட்சித் தலைவர்கள் வீட்டில் அல்லது கட்சி கஜானாவில் கோடிக்கணக்கில் பணம் சேர்த்து வைக்கப் பட்டிருக்கிறதாகப் பேசப்படுவதும் புலனாய்வு செய்யப் பட வேண்டும்.

அரசியலில் புகுமுன் இவர்களுடைய சொத்து மதிப்பென்ன? இன்று இவர்கள் பேரிலும் பினாமியாகவும் இவர்கள் சேர்த்திருக்கும் சொத்தின் மதிப்பென்ன? நியாயமான முறையில் ஒரு மனிதர் எவ்வளவு சம்பாதித் திருக்க முடியும் என்ற கணக்கையும், இவர்கள் எப்படித் திடீர் குபேரரானார்கள் என்ற உண்மையையும், புலனாய்வுத் துறையும் கமிஷன்களும் நீதிமன்றமும் ஆராய வேண்டும். கடந்த இருபதாண்டுகளில் பொதுப் பணத்தைக் கொள்ளையடித்த அரசியல்வாதிகள்தான் இன்று ஏராளமாய் இருக்கிறார்கள்; பெரிய மனிதர் களாய் உலா வருகிறார்கள்; அரசியல் மேடையில் அமர் கிறார்கள் என்பது உண்மையானால்,

இது குற்றம்! இவர்கள் திருடர்கள்! இவர்கள் நீதி மன்றத்தின் முன் நிறுத்தப்பட வேண்டும்! தண்டிக்கப் பட வேண்டும்; ஜெயிலில் அடைக்கப்பட வேண்டும்.

நீதிக்கும் உண்மைக்கும் ஜனநாயகத்துக்கும் மதிப்புக் கொடுத்து நமது மத்திய அரசு இதற்கான நடவடிக்கை களை விரைவில் எடுக்குமா அல்லது தயங்குமா? மத்திய அரசு தயக்கம் காட்டுமானால், மத்திய அரசாங்கத்தின்

போக்கிலே உள்நோக்கம் இருப்பதாகப் பொதுமக்கள் எண்ண வாய்ப்பேற்படும்.

ஒன்று நிச்சயம். இன்று இவர்கள் நடவடிக்கை எடுத்தாலும் சரி, எடுக்காவிட்டாலும் சரி, ஒரு நாள் ஓமந்தூராரைப்போன்ற ஒரு தூய்மையாளர் முதல்வர் பதவிக்கு வரத்தான் போகிறார்; நீதி வழங்கப்படத் தான் போகிறது.

நான் ஒரு சமயம்—இளவயதில்—தமிழ்நாடு தனியே பிரிந்து தனி நாடாக இருப்பதுதான் நல்லது என்று தீர்மானமான அபிப்பிராயம் கொண்டிருந்தேன். ஆனால், கடந்த பல ஆண்டுகளில் நடந்த பல சம்பவங் களைப் பார்த்தபோது என் எண்ணத்தை மாற்றிக் கொண்டேன்.

டில்லி என்ற ஒரு மேலிடம் இல்லாமலிருக்குமானால் நமது தலைவர்கள், எதிர்க்கட்சித் தலைவர்களையும் உறுப்பினர்களையும் கரும்புள்ளி செம்புள்ளி குத்தி, தெரு வில் கேவலமாக நடத்திப் பொது இடத்தில் கழுவேற்றி, தங்கள் குடும்பத்தினருடன் சிம்மாசனத்தில் உட்கார்ந்து கண்டு களித்திருப்பார்கள் என்ற எண்ணம்தான் என்னுள் மேவியது.

தம்பீ! பாரம்பரியத்தைப் பற்றிப் பேசுபவர்களைக் கண்டு ஏமாந்துவிடாதே. டில்லி மேலிடத்தில் சுருக்குக் கயிற்றை வைத்துக்கொண்டு உயிரை ஊசலாட்டுபவர் களிடம் ஏமாந்து போகாதே. கவர்ச்சி, சினிமா, நாடக வசனம், கவிதை என்று பேசி உன்னைப் புல்லரிக்க வைத்துப் பச்சாத்தாபத்தில் உன் வோட்டைப் பிடுங்கிக் கொள்ள முயல்பவர்களைப்பற்றிக் கவனமாக இரு.

கொள்ளைக் கூட்டம் இன்னும் பிடிபடவில்லை. அவர்கள் மாறுவேடத்தில் உன்னிடம் வருவார்கள். முகத்திரையைக் கிழித்துப் பார். முன்னாள் கதைகளை எண்ணிப் பார்!

கோயிலில் சாமி இருப்பது உண்மையானால், தம்பீ, நீ நல்லவர்களுக்காக மணியடி!




## மக்கள் சக்தியை இயக்கமாக்குவோம்...

புரட்சிகளெல்லாம் மக்களிடையே ஏற்பட்ட மன மாற்றங்களால்தான் விளைந்திருக்கின்றன. மக்களிடையே மனமாற்றம் நிகழ, முதலில் ஒரு விழிப்புணர்வை நாம் உருவாக்க வேண்டும். ஓர் உத்வேகம், ஓர் ஈடுபாடு, நாட்டின் நிலைகண்டு கொதிப்பு, 'மாற்ற வேண்டும், மாற்றப்போகிறேன்' என்ற ஒரு வீர சபதம்—இதை நாட்டில் ஒரு சிலரிடமாவது நாம் உருவாக்க வேண்டும். இதற்காகத்தான் இந்தத் தொடர் எழுதப்பட்டது.

நாட்டின் மொத்த படித்த மக்களிடையே இந்த உணர்வுகள் எழுப்பப்பட வேண்டும். சமுதாயத்தில் ஒரு சில 'மகாபுத்திசாலிகள்' இருப்பார்கள். "இதுதானே நிலைமை. இதற்கெதற்கு ஒரு லெனின்? இதைக் காந்தி தென்னாப்பிரிக்காவிலிருந்து வந்தா செய்ய வேண்டும்?"

என்று பேசுபவர்கள் இவர்கள். எண்ணுகிற அளவுக்குச் செயல்பாடு இல்லாதவர்கள் இவர்கள். குறைசொல்கிற அளவுக்குச் செயல்புரிந்து ஒரு துரும்பையாவது கிள்ளிப் போடுவோம் என்று இறங்காதவர்கள். ஆனால், குறை சொல்ல உரிமை உண்டு என்று மார்தட்டுபவர்கள். நல்லது செய்பவர்களைக்கூட இவர்களது 'குற்றம் கண்டு பிடிக்கும் மனோபாவம்' தளரச் செய்யும். பொதுவாக, இவர்கள் பயனற்றவர்கள். அதிர்ஷ்டவசமாக இந்த அதிபுத்திசாலிகள், படித்த மக்களிடையே மிகக்குறைந்த சதவிகிதம்தான். இவர்களைப்பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

மற்றொரு பகுதியினர் 'என்ன எழுதி, பேசிப் பலன் என்ன? எதுவும் செய்ய முடியாது' என்ற விரக்தியின் கடைசி நிலையை அடைந்தவர்கள். மனசிகிச்சை நிபுணர் களைத் தனித்தனியாக வைத்து இவர்களை மனமாற்றம் செய்வதுகூடக் கஷ்டமான விஷயம்; பயனற்ற விஷயம். அவர்களை நாம் விட்டுவிடலாம்.

ஆனால், நடுவிலுள்ள படித்த சுமார் 70-80 சத விகிதப் பெரும்பான்மை மக்கள் இருக்கிறார்களே, அவர்களால்தான் எந்த நாடும் முன்னேறியிருக்கிறது. பலன் கண்டிருக்கிறது. அவர்கள்தான் சாதனையாளர் கள். சிலர் அமைதியாகப் பொதுவாழ்வில் ஈடுபட்டிருப் பார்கள். சிலர் ஊரைக் கூட்டிக் காரியத்தை நிகழ்த்து வார்கள்.

அடுத்து வரப்போகிற மாற்றம், இவர்களால்தான் நிகழப்போகிறது. இவர்கள் மாணவர்களாகக் கிராமத் தில் இருக்கிறார்கள். பெண்களாகக் கிராமத்திலும், கல்லூரிகளிலும் இருக்கிறார்கள். நெய்வேலிக்கடியில் இருக்கும் அடிமட்ட நீர், மேலே உள்ள நிலக்கரியை

எடுத்தவுடன் பீரிட்டு எழுவதுபோல இவர்கள் மகத்தான சக்தி வாய்ந்தவர்கள், லட்சிய ஈடுபாடு கொண்டவர்கள்.

இவர்கள்தான்—இளைஞர்கள் ,பெண்கள், விஷயம் தெரிந்த கிராம மக்கள்—ஒரு நாட்டின் புரட்சி விதைகள்!

'உங்கள் கருத்துக்கள் கிராம மக்களை, படிக்காத பாமர மக்களைச் சென்று அடையாதவரை எப்படி மாற்றம் ஏற்படும்?' என்று சிலர் எனக்குக் கடிதங்கள் எழுதுகிறார்கள். உண்மை...அதே சமயம் பல படித்த பெண்கள், குடும்பத் தலைவிகள் கிராம மக்களிடம் சென்று பேசினோம், நல்லவர்களை நாம் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று. 'யார் என்று சொல்லுங்கள், நாங்கள் வோட்டுப் போடுகிறோம்!' என்று கேட்கிறார்கள்' என எழுதுகிறார்கள்.

இப்படிக் கல்லூரி மாணவிகளும், விஷயம் தெரிந்த கிராமப் பெரியவர்களும், படித்த இளைஞர்களும், கிராம மக்களை—பாமர மக்களை ஊடுருவும்போது, பேசும்போது, விளக்கும்போது அங்கே மகத்தான மாற்றம் உண்டாகிறது. சில கிராமங்களில் அடியாள் அரசியல்வாதிகள் சிலர். கட்சியின் பெயரால் ஆரவாரம் செய்கிறார்கள். உண்மை...ஆனால், இவர்களது ஆரவாரத்துக்கேற்ப இவர்களுக்கு உண்மையான சீடர் கூட்டம் இருப்பதில்லை. ஒரு சில ஆர்ப்பட்டக்காரர்களை வைத்து மிரட்டி ஊரையே மசிய வைத்துவிடலாம் என்று அவர்கள் மனப்பால் குடிக்கின்றனர்! வோட்டுப் போடுவது ரகசியத் தேர்வுமுறை. ஆகவே, மனம் மாறிய மக்கள் ஒரு கிராமத்தில் உருவாக்கப்பட்டிருக்கும்போது தேர்தல் முடிவுகள் ஆர்ப்பாட்டக்காரர்களுக்குத் திகைப்பையும், ஏமாற்றத்தையும் அளிக்கும். கடந்த

தேர்தல்களில் இத்தகைய ஏமாற்றங்களை, ஆர்ப்பரித்த அரசியல் தலைவர்கள் சந்தித்தார்கள். நமக்கு நன்றாக நினைவிருக்கிறது.

ஒவ்வொரு கிராமத்திலும் படித்தவர்கள், கல்லூரி செல்பவர்கள், விஷயம் தெரிந்த பெரியவர்கள், உலக ஞானம் மிக்க பெண்கள்—என்று ஒரு குறிப்பிடத்தக்க கூட்டம் அடி நீரோட்டமாக இருக்கிறது.

ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு போஸ்ட் மாஸ்டர் இருக்கிறார். இரண்டு மூன்று ஆசிரியர்கள்—ஆசிரியைகள் இருக்கிறார்கள். அந்தக் கிராமத்திலிருந்து கல்லூரிக்குச் செல்லும் மாணவ—மாணவிகள் இருக்கிறார்கள். இவர்கள்தான் அந்தக் கிராமத்தின் அறிவு ஜீவிகள்; ஊரில் விஷயங்களை விளக்கிச் சொல்லி நியாயத்தைப் புரிய வைப்பவர்கள்; மக்களை மறைமுகமாக வழி நடத்திச் செல்பவர்கள் (Thought Leaders).

இதை இவர்கள் உணர்ந்து செயல்பட்டால், செயல்படும்போது—என்ன ஆகுமென்று நினைக்கிறீர்கள்...?

மாற்றம் வரும், மகத்தான மாற்றம் வரும்.

நியாயம் வெல்லும். உண்மை ஜெயிக்கும். இத்தனை நாளும் எந்தத் தர்ம நியாயமான காரியங்களுக்குத் தலைவணங்கி நாம் வாழ்வை நடத்தினோமோ, அந்த நெறிகளின் வெற்றியாக மாற்றம் ஏற்படும். மாற்றம் ஏற்பட்டால்தான் நாடு பிழைக்கும்.

எனக்குச் சந்தேகமில்லை.

'அப்படிப்பட்ட நல்லவர்களை எங்களுக்கு அடையாளம் காட்டுங்கள். அதற்கான ஓர் அமைப்பை உருவாக்குங்கள். எழுதிக்கொண்டே இருந்தால்

போதாது! 'களத்தில் இறங்கு தம்பீ' என்ற வார்த்தைகள், உங்களுக்கும் பொருந்தும் என்பதை மறக்காதீர்கள்!' என்று வாசகர்கள் பல பக்கக் கடிதங்களைச் சமாளிக்க முடியாத அளவுக்கு எழுதுகிறார்கள்—நெஞ்சைக் கொட்டி; ஆர்வத்தை மையாக்கி; லட்சியத்தை ஜீவனாக்கி...

அண்ணா பல்கலைக்கழகத்து மாணவிகளிலிருந்து பூம்புகார் கல்லூரி பேராசிரியர்கள்வரை, கோவை வழக்கறிஞர் சங்கத்திலிருந்து திருநெல்வேலி வங்கிக்காரர்கள் சங்கம்வரை எல்லோரும் ஒரே கருத்தைத் தான் எழுதினார்கள். 'ஏன் நீங்கள்?'

இன்று இவற்றுக்கெல்லாம் செயல் வடிவம் கொடுக்க வேண்டிய நேரம். ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு, நான் சும்மாயிருந்தால் எனக்கே நான் பொய்த்தவனாவேன்.

படித்த மக்கள், நல்ல உள்ளம் படைத்த மக்கள், நாட்டின்பால் அக்கறை கொண்ட நல்லோர், ஒத்த உள்ளம் படைத்தவர்கள் அனைவரும்—நாம் ஒன்று சேரவேண்டும்.

தனிமனிதனாகச் சாதிக்க முடியாதவற்றை எல்லாம் ஓர் அமைப்பின் கீழ், கூட்டு வலிமையினால் நாம் சாதிக்க முடியும், தம்பீ! திரும்பவும் சொல்கிறேன்...

நமக்கு ஓர் அமைப்பு தேவை. ஊர்தோறும் அமைப்பு தேவை. ஊருக்கு ஆறு பேர் போதும்.

நாம் இந்த ஊர் அமைப்புகளை எல்லாம் ஒரு தலைமையின் கீழ் ஒன்றுபடுத்த வேண்டும். மக்கள் சக்தியை—மக்களின் நல்லெண்ணங்களை ஒன்று

திரட்டும்போதுதான்—அதை ஓர் இயக்கமாக மாற்றும் போதுதான், நமது ஜீவசக்தி—ஜீவகாந்தம் பெறுகிறது. 'நம்மால் முடியும்' என்ற விழிப்புணர்வு பெறுகிறார்கள் மக்கள்.

'இது அரசியல் இயக்கமா? கலாச்சார இயக்கமா?' என்று இப்போது நாம் கேட்பதில் அர்த்தமில்லை. போகப் போகப் பார்த்துக்கொள்ள வேண்டிய விஷயம் அது. ஆனால்...

ஒரு மாற்றை வைக்கவேண்டிய நேரம் இது—

அதற்காகப் பாடுபட வேண்டிய நேரம் இது—

தியாகம் செய்யாமல் எந்தவொரு பொருளையும் நாம் பெறமுடியாது. உழைப்பை ஈடாக்காமல் எந்த லட்சியத்தையும் நாம் அடையமுடியாது.

மக்களின் சக்தியை ஒன்றுபடுத்துவோம் இன்று. அதை ஓர் இயக்கமாக எடுத்துச் செல்வோம், கிராமந் தோறும்!

தம்பீ! உன் கடிதம் உன் செயல்களை—ஊரக அமைப்பு விவரங்களைச் சுமந்து வரட்டும். இன்றைய நேரம் நமது நேரம்!

நாளையும் நம்முடையதுதான்! நம்மால் இது முடியும் தம்பி, நம்பு!

(முற்றும்)

## டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

மனவியலைப்பற்றித் தொடர்ந்து, கடந்த பதினைந்து ஆண்டுகளாக தமிழ்ப் பத்திரிக்கைகளில் கட்டுரைகள் எழுதிவந்தவர்—எழுதிவருபவர்—டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தி. மனோ தத்துவங்களை வாழ்க்கைக்கு எப்படிப் பயன்படுத்துவது என்பதைச் சுமார் 12 நூல்களில் வடித்துத் தந்திருக்கிறார் அவர்.

"என்னை நானே முன்னேற்றிக்கொள்ள நான் செய்த முயற்சிகள்தான் எனது 'எண்ணங்கள்' என்ற நூல். முன்னேறிய விஞ்ஞானிகள், தொழிலதிபர்கள், பிரமுகர்கள், தலைவர்கள் என்று பலரது வாழ்க்கைச் சரித்திரத்தைப் படித்து நான் தெரிந்து கொண்டதை—வாழ்வில் எனக்கேற்பட்ட அனுபவங்களை—நம் நாட்டுச் சரித்திரம், இன்றைய சமுதாயம் என்ற பரந்த பின்னணியை வைத்துக் கட்டுரைகளை எழுதினேன். அவை என்வாழ்விற்குப் பெரிதும் துணை புரிந்தன. என் எண்ணங்களை வாசகர்களுடன் விகடனில் பகிர்ந்து கொண்டேன்" என்று தன் நூல்களைப்பற்றிக் கூறுகிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

சுயவளர்ச்சிபெற வாசகர்கள் 'எண்ணங்கள்', 'மனமும் பிரார்த்தனையும்', 'நெஞ்சமே அஞ்சாதே நீ!', 'தட்டுங்கள் திறக்கப்படும்!' என்று அவரது நூல்களைப் படிக்கவேண்டும்.

சுய பொருளாதார மேம்பாடு பெற அவரது 'சிந்தனை தொழில் செல்வம்' என்ற நூலை உங்கள் தலையணை மந்திரமாக உபயோகிக்க வேண்டும்.

சமுதாய ஈடுபாட்டின் அவசியத்தை உணர அவரது 'நாடு எங்கே செல்கிறது' என்ற நூலையும் "நம்மால் முடியும் தம்பி!" என்ற நூலையும் நாட்டு நலனில் அக்கறை கொண்ட அனைவரும் படிக்கவேண்டும்.

ஏனெனில் அவர் உருவாக்கி இருக்கும் மக்கள் சக்தி இயக்கத்தின் முக்கிய லட்சியங்கள் மேலே குறிப்பிட்ட மூன்றும்தான். சுயவளர்ச்சி, சுயபொருளாதார மேம்பாடு, சமுதாய ஈடுபாடு என்ற மூன்றையும் முன்வைத்து, ஒரு முழு சமுதாயத்தை உருவாக்க முடியும் என்று நம்புகிறார் அவர்.

'ஏன் மக்கள் சக்தி இயக்கம்?' என்ற கேள்விக்கு "நான் பத்திரிகைகளில் நாட்டைப்பற்றிய பலவிதச் சிந்தனைகளையும் யோசனைகளையும் எழுதியபோது, ஏன் நீங்கள் பொதுவாழ்வில் இறங்கிப் பாடுபடக்கூடாது?" என்ற கேள்வி லேசாகத் துவங்கி, மிகப்பெரிதான குரலில் ஒலிக்கத் துவங்கியது. ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு ஒதுங்கி நின்றால், 'அவருக்குத் தைரியமில்லை; அல்லது அவர் எழுதுவதிலே அவருக்கே நம்பிக்கையில்லை; அல்லது அவரது சுய சௌகரியம்தான் முக்கியம் அவருக்கு' என்று எனது வாசகர்கள் எண்ணக்கூடும். எழுதியதற்கேற்ப செயல்பட வேண்டும்—நம்மால் முடிந்ததைச் செய்யவேண்டும்—என்ற நோக்கில்தான் மக்களிடையே ஒரு அரசியல், சமுதாய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த மக்கள் சக்தி இயக்கத்தைத் துவங்கினோம்" என்று விளக்குகிறார் உதயமூர்த்தி.

எம். எஸ். உதயமூர்த்தியின் உந்துதல்கள் கன்னியாகுமரியிலிருந்து கிருஷ்ணகிரிவரை, வேதாரண்யத்திலிருந்து வால்பாறை வரை இளைஞர்களை, பெண்களை—படித்த மக்களை—ஒரு உத்வேகம் பெறச் செய்திருக்கிறது. சமீபத்தில் டைரக்டர் பாலசந்தர் 'உன்னால் முடியும் தம்பி' என்ற தலைப்பில் ஒரு திரைப்படத்தை வெளியிட்டிருக்கிறார். அப்படத்தின் கதாநாயகன் பெயர் உதயமூர்த்தி. இப்படி பாலசந்தரிலிருந்து பள்ளி இளைஞர்கள் வரை—அவரது எழுத்துக்கள் ஒரு பாதிப்பை—ஒரு உத்வேக உணர்வை—

ஒரு நம்பிக்கையை—உருவாக்கி இருக்கிறது; ஒரு அமைதியான மாற்றம் நாட்டில் ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது.

எம். எஸ். உதயமூர்த்தி விளநகர் என்ற கிராமத்தில், மயிலாடுதுறை தாலுக்காவில், தஞ்சை மாவட்டத்தில் பிறந்தவர். மயிலாடுதுறை உயர்நிலைப் பள்ளியில் படித்தபின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இளநிலை பட்டப்படிப்பும் முதுநிலை பட்டப்படிப்பும் பெற்றார். சென்னை பல்கலைக்கழகத்தில் தனது பாடமான வேதியியலில் மற்றோர் முதுநிலைப் பட்டம் பெற்ற பின் மேற்படிப்புக்கு அமெரிக்கா சென்றார்.

அமெரிக்கா செல்லுமுன் குடந்தை அரசினர்க் கல்லூரியிலும், கிண்டி பொறியியல் கல்லூரியிலும் (இன்றைய அண்ணா பல்கலைக்கழகத்திலும்) வேதியியல் (Chemistry) உதவிப் பேராசிரியராகப் பணியாற்றினார்.

அமெரிக்காவில் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் மருத்துவ ரசாயனத்தில் டாக்டர் பட்டம் பெற்று ஒரு பத்தாண்டுகள் விஸ்கான்சிலுள்ள மவுண்ட் செனாரியோ கல்லூரியிலும், மின்னசோட்டா, ஐடகோ பல்கலைக் கழகங்களிலும் பேராசிரியராகப் பணியாற்றினார்.

பின், ஆசிரியத்துறையைவிட்டு விலகி விஸ்கான்சினில் உணவு தயாரிக்கும் நிறுவனம் ஒன்றில் அதன் தலைமை நிர்வாகியாக நான்காண்டுகள் பணியாற்றினார். 1982-ல் (Barclay Chemicals) பார்க்கிளே கெமிகல்ஸ் என்ற தனது சொந்த ரசாயனப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிறுவனத்தைத் துவங்கினார். அந் நிறுவனத்தைத் தனது குமாரரிடம் ஒப்படைத்துவிட்டு 1987-ல் நிரந்தரமாக இந்தியா வந்தார். இன்று சென்னையில் வசிக்கிறார் அவர்.

சிறந்த ஆசிரியர் என்ற விருதும், 'புல்பிரைட்' அறிஞர் (FUL BRIGHT SCHOLAR) என்ற கௌரவமும், அமெரிக்கா

வில் தொழில் துறையில் உள்ளவர்களில் 'யார் யார்' என்ற நூலில் அவரது பெயர் இடம்பெற்ற பெருமையும் அவருக் குண்டு.

தன் கட்டுரைகளின் மூலம், பேச்சின்மூலம், செயல்களின் மூலம் ஆக்கப்பணிகளைச் செய்து வருகிறார்; மக்களைத் தட்டி எழுப்பி வருகிறார்.

தனது அறிவுக்கும் திறமைக்கும் ஏற்ற ஒரு புதிய சமுதாயத்தைத் தமிழகம் பெறவேண்டும் என்று விரும்பு கிறார் எம். எஸ். உதயமூர்த்தி.

எம். எஸ். உதயமூர்த்தி ஒரு எழுத்தாளர்

எழுத்து என்னவெல்லாம் செய்யும்?

பொறுத்திருந்து பார்ப்போம்!

## டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

### எழுதிய இதர நூல்கள்

| | ரூ. | பை |
|---|---|---|
| ஆத்ம தரிசனம் | 5 | 00 |
| நெஞ்சமே அஞ்சாதே நீ! | 8 | 00 |
| தட்டுங்கள் திறக்கப்படும் | 8 | 00 |
| மனமும் பிரார்த்தனையும் | 9 | 00 |
| தலைவன் ஒரு சிந்தனை | 10 | 00 |
| எண்ணங்கள் | 10 | 00 |
| மனித உறவுகள் | 10 | 00 |
| பிரச்சினைகளுக்கு முடிவு காண்பது எப்படி? | 12 | 00 |
| நாடு எங்கே செல்கிறது? | 12 | 00 |
| தன்னம்பிக்கையும் உயர் தர்ம நெறிகளும் | 14 | 00 |
| சிந்தனை தொழில் செல்வம் | 15 | 00 |

வானதி பதிப்பகம்
13, தீனதயாளு தெரு,
தி. நகர், சென்னை-600 017.

